

தாய்லாந்து நாட்டின் கலை,
கலாசாரம், வரலாற்றுச் சிறப்பு,
மக்களின் வாழ்க்கை முறை பற்றி நேரில்
பார்த்து வந்து சாவி இதழில் தொடர்
கட்டுரையாக எழுத வேண்டும் என்று
விருப்பம் தெரிவித்து எனது சுற்றுப்
பயணத்துக்கான எல்லா
ஏற்பாடுகளையும் செய்து உதவிய
இந்தியன் வங்கித் தலைவர்
எம்.கோபாலகிருஷ்ணன் அவர்களுக்கு
இந்த நூலைச் சமர்ப்பிக்கிறேன்.

— சாவி

# தாய்லாந்து

சாவி

●●●

இருமுறை தாய்லாந்து நாட்டில் சுற்றுப்பயணம் செய்து எழுதிய பயணக் கட்டுரைகள்.





சிங்கப்பூர் 'சாங்கி' விமான கூடத்தைக் காட்டிலும் சிறப்பான இன்னொரு கூடத்தை இப்போது கட்டி முடித்திருக்கிறார்கள். அது எங்கே என்றால் சிங்கப்பூரிலேயேதான். அதுவும் முதல் விமான கூடத்துக்குப் பக்கத்திலேயேதான். தூய்மையிலும், துல்லியத்திலும் அண்ணன் தம்பிக்குள் போட்டா போட்டி!

சிங்கப்பூரிலிருந்து பாங்காக் போய்ச் சேர மூன்று மணி நேரம் என்றால், பாங்காக் விமான கூடத்திலிருந்து ஹோட்டலுக்குப் போய்ச் சேர ஏறத்தாழ அவ்வளவு நேரம் ஆகி விடுகிறது. அப்படியொரு போக்குவரத்து நெரிசல். சாலை முழுதும் கார்களும் ஆட்டோக்களும், டிரக்குகளும் இரண்டு சக்கர ஹோண்டா வகையறாக்களும் நிரம்பி வழிகின்றன. எங்கள் டாக்ஸி டிரைவர் சரளமாய் இங்கிலீஷ் பேசினார்.

''தாய்லாந்தில் வாகனங்கள் அதிகமோ?'' என்று அவரிடம் கேட்டேன்.

''ஆமாம்; வாகனங்களின் எண்ணிக்கைக்கு அடுத்தது புத்தர் சிலை பாபுலேஷன்!'' என்றார் அவர்.

பாங்காக்கில் நீண்ட நெடிய கட்டிடங்கள் விண்முட்டி நிற்கின்றன. மொட்டையாக நிற்கும் அந்தக் கட்டிடங்களுக்கு இடையே கூர் கூரான புத்தர் ஆலயங்கள் உயர்ந்து நிற்கின்றன.

தாய்லாந்து முழுதும் மொத்தம் 27000 புத்தர் ஆலயங்கள் உள்ளன வாம்!

இந்த ஊசிமுனைக் கூர்மைகள் இளநீர்க் காய்களிலும் பார்க் கலாம். அந்தக் காய்களை வெள்ளை வெளேரென்று ஒரு மினி கோபுரம் போல் சீவித் தருகிறார்கள். அதைப் போலவே நாட்டி யப் பெண்கள் தலையிலும், கை விரல்களிலும் கூர்மையான அணிகள்தான்.

வரைபடத்தில் தாய்லாந்தின் அமைப்பைச் சற்று உற்றுக் கவனித்தால் அதுவும் கூராகவே தெரியும். அந்த நாட்டின் அமைப்பே யானையின் துதிக்கை வடிவத்தில் கூர்மையாக முடிகிறது.

புத்திக் கூர்மையிலும் தாய்லாந்து மக்கள் மற்றவர்களுக்கு இளைத்தவர்களல்ல. தாய்லாந்துப் பெண்களை கவியரசு கண் ணதாசன் 'தாய்க்கிளிகள்' என்று வர்ணிக்கிறார்.

சிறந்த கலாசாரம், பிரகாசமான சிவப்பு விளக்கு – இந்த இரண்டு முகங்களையும் கொண்டதுதான் தாய்லாந்து. பாங்காக் கில் சிவப்பு விளக்கின் ஒளி கொஞ்சம் அதிகமாகவே வீசுகிறது. என்னுடன் வந்த ராணிமைந்தனையும், புஷ்பா தங்கதுரையை யும் அழைத்து, 'அந்தப் பகுதியை நீங்கள் இருவரும் கவனித்துக் கொள்ளுங்கள். எனக்கு ரொம்ப சின்ன வயசு! ஆகவே அந்தப் பகுதிக்கு நான் 'லாயக்' இல்லை'' என்று கூறி 'எய்ட்ஸ்' பற்றி தாழ்ந்த குரலில் எச்சரித்து அனுப்பினேன்.

யானைத்தலை வடிவத்திலுள்ள அந்த நாட்டை விரிவாகச் சுற்றிப் பார்க்கக் குறைந்தது ஒரு மாத காலமாவது தேவை. ராமாயணத்தையும், இந்துக் கடவுளையும் தாய்லாந்து மக்கள் வழிபடுவது நம்மை வியக்க வைக்கிறது. ராமர் தெரு, சீதா டெக்ஸ்டைல்ஸ் என்ற பெயர்ப் பலகைகளும், பிரம்மா, விஷ்ணு, சிவன், விநாயகர் கோயில்களும் போகிற இடமெல் லாம் தென்படுகின்றன. ரத்னபுரி, காஞ்சனபுரி என்ற இரண்டு பெரிய ஊர்களுக்கும் போய் வந்தோம். நம் நாட்டில் காஞ்சிபுரம் என்றால் அங்கே காஞ்சனபுரி! எங்கே போனாலும் இந்தியாவின் பழமையைப் பார்ப்பது போன்ற பிரமை.

டி.வி.யில் அடிக்கடி ராமாயணம் காட்டுகிறார்கள். நான் தங்கியிருந்த ஓட்டலில் கூட ஒரு நாள் ராமாயணத்தைச் சித்திரக் காட்சியாகப் பார்த்தேன்.



பாங்காக்கில் ஐந்து நட்சத்திர ஓட்டல் ஒன்றுக்கு அஸ்தி வாரம் போடும் போது பூமிக்கடியில் பிரம்மாவின் சிலை ஒன்று கண்டெடுக்கப்பட்டதாம். அதை அந்த ஓட்டல் வாசலிலேயே (நாலு வீதிகள் கூடுகிற இடம்) கோயில் கட்டி வைத்திருக்கிறார் கள்.

தாய்லாந்தில் பிரம்மாக்கள் அதிகம்! பிரம்மாவுக்கு வழிபா டும் அதிகம். இசை மூலம் வழிபடுகிறவர்களும் உண்டு.

சங்கீதக்காரர்கள் அங்கே கோயிலுக்கருகிலேயே தயாராக உள்ளனர். பணம் கொடுத்தால் பாடுகிறார்கள். அதே போல் நடனக்காரர்களும் இருக்கிறார்கள். பணம் கொடுத்தால் ஆடுகி றார்கள்.

பாங்காக்கில் எனக்கொரு நெருங்கிய நண்பர் இருக்கிறார். பெயர் ஹுமாயூன். ஹாங்காங் 'ஜெம்' மர்ச்செண்ட் டாக்டர் அயூப் அவர்களின் மூத்த சகோதரர். நான் மந்திர் என்றால் அவர் மஸ்ஜித். எங்களுக்குள் இருக்கும் நல்லுறவு இந்து முஸ்லிம் நல்லிணக்கத்துக்கு ஓர் எடுத்துக் காட்டு.

''இங்கே ஒரு அயோத்தி இருக்கிறதே, தெரியுமா?'' என்று கேட்டார் ஹுமாயூன்.

''அயோத்தியா? இங்கேயா?'' என்று திருப்பிக் கேட்டேன்.

''ஆமாம். இங்கேயும் ஒரு அயோத்தி இருக்கிறது. ஆனால் அதை 'அயுத்தி' என்று உச்சரிக்கிறார்கள். பாங்காக்கிலிருந்து அயோத்திக்கு எழுபது எண்பது மைல் தூரம்தான். படகு, ரயில், கார் மூன்றிலும் போகலாம். நான் ஒரு வேனுக்கு ஏற்பாடு செய்கிறேன். அதில் எட்டு பேர் போய் வர முடியும்'' என்றார்.

மறுநாள் ஞாயிற்றுக் கிழமை. தயிர் சாதம், இட்லி, முறுக்கு, சீடை போன்ற உணவு சாதனங்களுடன் ஏழெட்டுப் பேர் பெரிய முஸ்தீபாய்ப் புறப்பட்டு விட்டோம். நண்பர் ஸ்ரீவேணுகோபாலன், 'ஆ! அயோத்தி! அயோத்தி! அங்கே என்னுடைய சரித்திரக் கதைக்கு வேண்டிய ஆதாரங்கள் நிறையக் கிடைக்கும்'' என்று சொல்லிச் சொல்லிப் பரவசப்பட்டுக் கொண்டிருந்தார். ஏதோ பெரிய அட்வென்சர் செய்யப் போவது போல் ஒரு த்ரில்!

வேனில் போகும் போது, ''அயோத்தியில் என்ன விசேஷம்?'' என்று ஹுமாயூனிடம் கேட்டேன்.

''நம் நாட்டில் உள்ளது போல் இந்த அயோத்தியிலும் கோயில், மசூதி இரண்டும் உண்டு. ஆனாலும், இங்கு எந்த விதமான சண்டை சச்சரவும் கிடையாது. எல்லோரும் ஒற்றுமையுடன் அமைதியாக வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றார்.

''அந்த அமைதிக்கு என்ன காரணம் தெரியுமா?'' என்று கேட்டேன் நான்.

''தெரியலையே!'' என்றார்.

''பி.ஜே.பி.யும்., அத்வானியும் இங்கே இல்லை; அதனால் தான்!'' என்றேன்.

ஹுமாயூன் 'குபுக்'கென்று சிரித்து விட்டார்!





அயோத்தி என்று பெயர்தானே தவிர, அங்கே ராமருக்குக் கோயில் இல்லை. ராமரின் நினைவாக வைத்த பெயர்தானாம்!

ஊரிலும்,ஊருக்கு வெளியிலும் புத்தர் கோயில்கள் ஏராள மாக உள்ளன. நாங்கள் 'வாட்ஃப்ரா' கோயிலுக்குப் போயிருந் தோம். மிகப் பெரிய ஆலயம். எல்.ஐ.ஸி. கட்டிடத்தைப் படுக்க வைத்தால் அது எவ்வளவு நீளம் இருக்குமோ அவ்வளவு தூரத் துக்கு புத்தர் கால் நீட்டிப் படுத்திருக்கிறார். ஒரு பிரதட்சணம் வந்தால் நம் கால்கள் வலிக்கின்றன! ஒரு சைக்கிள் இருந்தால் சுலபமாகச் சுற்றிப் பார்த்து விடலாம். புத்தர் நீளமாக ஒரு கோடிக்கு இன்னொரு கோடி படுத்திருப்பதால் 'தோள் கண்டார் கால் காணார்! கால் கண்டார் தோள் காணார்!' என்று சொல்ல லாம். கோயிலுக்குப் பக்கத்திலேயே திறந்த வெளியிலும் ஒரு புத்தர் படுத்திருக்கிறார். அந்த புத்தரைப் பார்த்த போது எனக்கு ஸ்ரீரங்கம் ரங்கநாதப் பெருமாள் நினைவுக்கு வந்தார். ரங்கநாத ரைப் பார்த்து இவர் படுத்துக் கொண்டாரா, அல்லது இவரைப் பார்த்து ரங்கநாதர் படுத்துக் கொண்டாரா தெரியவில்லை!

''அழகான சோலைகள் நிறைந்த இயற்கைச் சூழ்நிலை யைக் கண்டால் யாருக்குத்தான் இளைப்பாறத் தோன்றாது? அயோத்தியும் ஸ்ரீரங்கமும் அத்தகைய இடங்களாயிற்றே! அதனால் 'ஹாய்'யாகப் படுத்துவிட்டிருப்பார்கள்!'' என்றார் ஸ்ரீவே.

''இந்த புத்த விஹார் அறுநூறு ஆண்டுகளுக்கு முன் கட்டப்பட்டது'' என்றார் ஹுமாயூன்.

''இல்லை; அறுநூற்று மூன்று ஆண்டுகளுக்கு முன்பு'' என திருத்தினேன் நான். முகத்தில் கேள்விக் குறியுடன் அவர் என்னை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்தார்.

''நான் மூன்று வருடங்களுக்கு முன் இங்கே வந்திருந்த போதும் அறுநூறு வருடம் என்று சொன்னீர்கள். இப்போதும் அறுநூறு என்கிறீர்களே! மூன்றைக் கூட்டிச் சொல்லியிருக்க வேண்டாமா?'' என்று கேட்டேன்.

அயோத்தியை விட்டுப் புறப்படுமுன், ''எங்காவது நதிக் கரையில் வேனை நிறுத்திச் சாப்பிடலாமா?'' என்று கேட்டார் ஹுமாயூன். எங்கே பார்த்தாலும் தென்னையும், வாழையுமாகத் தஞ்சாவூர், ஸ்ரீரங்கம் மாதிரியே 'குளுகுளு' தோற்றம். படித் துறை ஒன்றைத் தேடிப் பிடித்தோம். கரையில் மிக உயரமான நாலுகால் மண்டபம். அங்கே வசதியாக உட்கார்ந்து சாப்பிடுவ தற்கு ஏற்றவாறு மரப்பலகைகள்.

நதியைக் கண்டதும், ஸ்ரீவேணுகோபாலன் சின்னக் குழந் தைபோல் ஓடிப் போய் படித்துறையில் இறங்கித் தண்ணீரைக் கால்களால் அளைந்து கொண்டிருந்தார். நாங்கள் ஏழெட்டு பேர் வயிறு முட்டச் சாப்பிட்டது போக மிஞ்சியதை, அங்கே வாலைக் குழைத்து நின்ற நாய்கள் பலத்த சண்டை சச்சரவோடு பங்கு போட்டுக் கொண்டன. ''காகங்கள் ஒன்று கூடி ஒற்றுமை யாகச் சாப்பிடும். நாய்கள் சண்டையிட்டுக் கொள்ளும்; நாமெல் லாம் காகங்கள் மாதிரி'' என்றார் ஸ்ரீவே.

''அடாடா! எவ்வளவு அமைதி! இப்படி ஓர் இடம் கிடைத் தது நம் அதிர்ஷ்டம்தான்'' என்றேன்.

''இது ஒரு மயானம் ஸார்! இது சாதாரண அமைதி அல்ல. மயான அமைதி என்று சொல்லுங்கள். இந்த ஊர்க்காரர்கள் கடைசியாக வந்து சேரும் இடம்!'' என்றார் ஹுமாயூன்.

சாவோ ப்ரியா எனும் நதியின் அகல நீளம் அதிகம். பாங்காக்கின் மையப் பகுதியில் ஓடிக் கொண்டிருக்கிறது. பெரிய பெரிய கப்பல்கள் இந்த ஆற்றில் நிற்கின்றன. நாங்கள் ஒரு படகு பிடித்து அந்த நதியில் சங்கமிக்கும் கிளைக்கால்வாய் ஒன்றில் பயணம் செய்தோம். அந்த இடத்தை மிதக்கும் கடைத் தெரு (Floating Market) என்று சொல்கிறார்கள்.

வாய்க்காலின் இரு புறங்களிலும் தேக்குமரத்தினாலான வீடுகள். படகில் போகும் போது அந்த வீடுகளின் பின்புறத்தை மட்டுமே பார்க்க முடிகிறது. ஒவ்வொரு வீட்டுக்கும் தோட்டப்



பக்கத்தில் படித்துறை. அங்கங்கே படிகளில் துணி துவைக்கும் பெண்களைப் பார்க்கும் போது கேரள ஜாடை வீசுகிறது!

படகுகளில் வேகமாக நம்மைத் துரத்தி வரும் தாய்லாந்து சிறுவர்களும், சிறுமிகளும் வாழைப்பழம், இளநீர் மல்லி போன்றவைகளை வாங்கச் சொல்லி வற்புறுத்துகிறார்கள்.

எங்கள் படகோட்டி ஓரிடத்தில் படகை நிறுத்தி ''இறங்குங் கள்; இங்கே தான் 'வாட் அரண்' இருக்கிறது'' என்றார். எண்ணி லாப் படிகள் பிரமிப்பைத் தந்தன. எனவே, படகில் இருந்த படியே அந்தக் கோயிலைப் பார்த்து விட்டுத் திரும்பினோம்.

'வாட் அருண்' என்றால் சூரியனுக்குக் கோயில். 'காலை நேரச் சூரியன்' என்று கூறினார் படகுக்காரர்.

''காலை நேரச் சூரியனா? எனக்கு ரொம்பப் பிடித்த சூரிய னாச்சே!'' என்று மகிழ்ந்து போனேன்.

அயோத்தியில் ராமர் இல்லாதது போல் இங்கே சூரியன் கோயிலில் சூரியன் இல்லை. இங்கேயும் புத்தர்தான்!

'மிதக்கும் கடைத்தெரு'வில் ஒன்றிரண்டு கடைகளே மிதந்து கொண்டிருந்தன. மற்றக் கடைகள் எல்லாம் கரை ஓரங்களை ஆக்கிரமித்துக் கொண்டிருந்தன. சின்னச் சின்னப் பொருட்களானாலும் கொள்ளை விலை. நம் ஊர் நரிக்குறவர்கள் விற்கும் பாசிமணி மாலைகள் இங்கே அமெரிக்க டாலர்களைக் குவித்துக் கொண்டிருக்கின்றன.

வடக்கே 'சாங்மாய்' மலைச்சரிவுகளில் வாழும் ஆதிவாசிகளைப் பார்க்க முடியாத டூரிஸ்ட்களுக்காக இங்கே கரையோரங்களில் அழகழகான ஆதிவாசிப் பெண்களைக் கொண்டு வந்து வரிசையாக நிறுத்தியிருக்கிறார்கள். அவர்கள் அசல் ஆதிவாசிகளா, அல்லது அவர்களைப் போல் 'மேக்-அப்' செய்து கொண்டவர்களா தெரியவில்லை. டூரிஸ்டுகள் அந்தப் பெண்களின் தோள் மீது கைபோட்டு நின்று படம் எடுத்துக் கொள்கிறார்கள். போட்டோகிராபர் 'ஸ்மைல் ப்ளீஸ்' சொல்லத் தேவையில்லை. எப்போதும் சிரித்த முகம்!

நான் அங்கே இருந்த போது தாய்லாந்து மன்னர் பூமிபால் அவர்களுக்கு அறுபத்தைந்தாவது பிறந்தநாள் விழா கொண்டாடிக் கொண்டிருந்தனர். புத்தகக் கடை ஒன்றில் எங்களுக்கு சாக்லெட் கொடுத்து, "இன்று ராஜா பிறந்த நாள்!" என்று கூறிய போது, நாங்கள் அந்தக் கடைக்காரர், ராஜா இருவரையும் வாழ்த்தினோம்.

பல ஆண்டுகளாக ராணுவ ஆட்சிக்கு உட்பட்டிருந்த தாய்லாந்தில் பொதுத் தேர்தலுக்குப் பின்னர் இப்போதுதான் நிலைமை சற்றே மாறி வருகிறதாம். 'ஒரு நாட்டின், வளர்ச்சியை அந்த நாட்டின் பங்கு மார்க்கெட் எதிரொலிக்கும்' என்று கேள்விப் பட்டிருக்கிறேன்.

ஆனால், அரசியல் நிலைமை சீரடைந்து வரும் தாய்லாந்தில் இப்போது பங்குமார்க்கெட் துருப்பிடித்துக் கிடக்கிறதென்றும் அடுத்த ஆண்டு சீர்பட்டு விடும் என்றும் சொல்கிறார்கள்.

ரோஸ் கார்டன் என்பது பாங்காக்கிலிருந்து 32 கிலோ மீட்டர் தூரத்தில் அறுபது ஏக்கர் நிலப்பரப்பில் நிர்மாணிக்கப் பட்டுள்ள ஒரு தோட்டம். இங்கு 'தாய்'க்கிளிகளுடன் அசல் கிளிகளும் கொஞ்சிக் குலவுகின்றன. தாய்லாந்து கலாசாரத்தின் ஒரு 'மினி' தோற்றத்தையே இங்கு 'கல்ச்சுரல் ஷோ'வில் பல்

வேறு காட்சிகளைத் தத்ரூபமாய்ச் செய்து காட்டுகிறார்கள். வெளிநாட்டுக்காரர்கள் ஆவலோடு அங்கே நாள்தோறும் தேர்த் திருவிழா போல் வந்து கூடுகிறார்கள்.

கோழிச்சண்டை, கத்திச் சண்டை, குத்துச் சண்டை, யானைகளின் சாகசங்கள், தாய் நடனம், கிராமியப் பாடல், வீர விளையாட்டு என்று ஏகப்பட்ட அய்ட்டங்களைப் 'பரபர'வென்று இரண்டே மணி அவகாசத்தில் நடத்தி முடிக்கிறார்கள்.

நிகழ்ச்சியின் க்ளைமாக்ஸ் 'தாய்' நாட்டுத் திருமணச் சடங்குதான்! தத்ரூபமாய் ஒரு கல்யாணத்தையே மேளதாளத்துடன் நடத்தி விடுகிறார்கள். திருமணத்தின் போது ஏழு ஸ்வரங்களுக்கும் தனித்தனியே ஏழுவாத்தியங்கள் வைத்து அவற்றை ஸப்த கன்னியர்கள் வாசிப்பது கண்ணுக்கும் காதுக்கும் இனிமை தரும் நிகழ்ச்சி!

முதலில் சீர்வரிசைகள் வருகின்றன. அப்புறம் புரோகிதர்கள் வருகிறார்கள். மணமக்களை மேடையில் உட்கார வைத்து மணமகள் தலையில் கொத்தாக நூல் செண்டு ஒன்றைச் சுற்றி நூலிழை அறுபடாமல் அப்படியே மணமகன் தலையில் சேர்த்துக் கட்டி விடுகிறார்கள். நம் நாட்டில் பெண்ணின் கழுத்தில் தாலி கட்டுவது போல அங்கே தலையில் நூலைக் கட்டுகிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம்!

இங்கே நம்மூரில் கணவனுக்குக் கோபம் வந்தால், 'உன்னை என் தலையில் கட்டி விட்டார்களே' என்று அலுத்துக் கொள்வது உண்டல்லவா! அங்கே நிஜமாகவே தலையில் கட்டி விடுகிறார்கள்!





அந்தக் காலத்து ஆசைகள் எந்தக் காலத்திலாவது எப்போ தாவது நிறைவேறும் போது நாம் அடையக் கூடிய மகிழ்ச்சிக் கும் பரவசத்துக்கும் இணை வேறெதுவும் இல்லை. அத்தகைய் ஓர் அனுபவம் எனக்குத் தாய்லாந்து பயணத்தின்போது கிட்டியது.

உங்களில் எத்தனை பேர் அந்தப் படத்தைப் பார்த்திருப்பீர் களோ, தெரியாது... 'த பிரிட்ஜ் ஓவர் த ரிவர் க்வாய்' என்றொரு மகத்தான ஆங்கிலப் படம் அந்தக் காலத்தில் சக்கைப் போடு போட்டது.

யுத்தக் கைதிகளைக் கொண்டு க்வாய் நதியின் மீது கட்டப் பட்ட ஒரு பாலத்தின் கதையைத்தான் ரயில் தொடர் போலவே நீளமாகப் பெயர் சூட்டிப் படமாகத் தயாரித்திருந்தார்கள். அந்த நீளமான பெயர் மீது எனக்கொரு காதலே பிறந்து என் மனதி லேயே நிலைத்து நின்று விட்டது.

'ஒரு ஊதாப்பூ கண்சிமிட்டுகிறது!' என்றொரு தலைப்பை புஷ்பா தங்கதுரையிடம் சொல்லி அந்த தலைப்புக்குப் பொருத் தமா, தினமணி கதிரில் தொடர் கதை எழுதச் சொன்னேன். 'The Bridge over the River Kwai'. என்ற அந்த நீண்ட பெயரின் பாதிப்புதான் இதற்குக் காரணம்.

இப்படி ஒரு பாலம் உண்மையிலேயே தாய்லாந்தில் இருக் கிறது என்றும், அங்குதான் அந்தப் படத்தின் ஷூட்டிங் நடை பெற்றது என்றும் அறிந்தபோது அந்த இடத்தை ஒருமுறை போய்ப் பார்த்து விட வேண்டுமென நந்தன் சிதம்பர தரிசனத் துக்கு ஆசைப்பட்டது போல் பேராவல் கொண்டிருந்தேன். அந்த ஆசை அண்மையில்தான் நிறைவேறியது. அங்கே போய் விசா ரித்த போது அந்தப் படத்தின் படப்பிடிப்பு அங்கே நடத்தப்பட



வில்லையென்றும் படப்பிடிப்புக் குழுவினர் அந்தப் பாலத்தைப் பல கோணங்களில் போட்டோ எடுத்துக் கொண்டு போய் அச்சாக அது போலவே இலங்கையில் ஒரு 'செட்' போட்டு முடித்து விட்டார்கள் என்றும் சொன்னார்கள்.

க்வாய் பாலம் பார்ப்பதற்கு மிகச் சாதாரணமாகவே இருந்தது. ஆயினும் அதன் சரித்திரப் பின்னணி மிகமிக பயங்கரமானது. காஞ்சனபுரிக்கு நாலு மைல் தூரத்தில் உள்ள க்வாய் பாலத்தைக் காண நாங்கள் ஒரு 'ஜமா'வாகப் புறப்பட்டோம். பாங்காக்கிலிருந்து 129 கி.மீ. தூரம் பயணம் செய்து வடமேற்கு திசையில் உள்ள காஞ்சனபுரியை அடைந்தபோது சற்று ஏமாற்றமாகவே இருந்தது. எதிர்பார்த்த பிரமிப்போ வியப்போ இல்லை.

யூனிபார்ம் அணிந்த நூற்றுக்கணக்கான பள்ளி மாணவர்கள் அதன் மீது ஓடிக் கொண்டிருந்தனர். அவர்களைப் போல் எனக்கும் அதன் மீது நடக்க வேண்டும் போல் இருந்தது. நடந்தேன். அப்படி நடக்கும் போது இதன் பின்னணியான சரித்திர நிகழ்ச்சிகள், ரயில் ஓடும் போது மரங்களும் மலைகளும் வேகமாய் எதிர் நோக்கி ஓடுமே, அந்த மாதிரி என் கண் முன் ஓடின.

1941ம் ஆண்டு டிசம்பர் மாதம் எட்டாம் தேதி அதிகாலை நான்கு மணி. தாய்லாந்து வழியாகப் புகுந்து பர்மா வைக் கைப்பற்ற வேண்டும் என்கிற ஒரு பெரிய திட்டத்துடன் ஜப்பானியப் படைகள் இந்த காஞ்சனபுரிப் பகுதியில் புகுந்து முகாமிட்டன.

தாய்லாந்து ராணுவம் ஜப்பானியரின் ஊடுருவலை வேடிக்கை பார்த்துக் கொண்டு சும்மா இருக்குமா? ஜப்பானி யரை எதிர்த்துப் பெரும் போர் நிகழ்த்தியது. காலையிலிருந்து மாலை வரை தொடர்ந்து நடந்த இந்தப் போரில் நாற்பது ஜப் பான் ராணவ வீரர்கள் கொல்லப்பட்டார்கள் என்றும் தாய் ராணு வத்திலும் பலர் உயிரிழந்தார்கள் என்றும் கய்டு சொன்னார்.

ஜப்பான் ராணுவத்தின் நோக்கம் பர்மாவைக் கைப்பற்றுவ துதானே தவிர தாய்லாந்தைப் பிடிப்பது அல்ல என்று உறுதியா கத் தெரிந்ததும், 'சரி, போய்க்கோ' என்று ஒரு ஒப்பந்தம் செய்து கொண்டு ஜப்பானியருக்கு வழிவிட்டது தாய்லாந்து.

சண்டை நடந்து கொண்டிருந்த போதே பர்மாவையும் தாய் லாந்தையும் இணைக்கும் பாதை ஒன்றை அமைக்கும் முயற்சி யில் ஈடுபட்டது ஜப்பான். தினமும் மூவாயிரம் டன் தளவாடங் களை சப்ளை செய்யும் அளவுக்கு பாதுகாப்பான ஒரு பாதையை அமைக்க வேண்டும். இதுதான் ஜப்பானின் திட்டம். கடல் மார்க்கமாகப் போனால் நேச நாடுகளின் சப்மரின்கள் சும்மா விடாது என்பது ஜப்பானுக்குத் தெரிந்திருந்ததால் இந்த ரயில் பாதை திட்டத்தை மேற் கொண்டது அது.

எனவே, தாய்லாந்தில் தொடங்கி மலைக் காடுகள் வழி யாக ரயில் பாதை ஒன்றை அமைத்து அந்த வழியாக பர்மாவை இணைத்துவிட வேண்டும் என்ற தங்கள் திட்டத்தை மின்னல் வேகத்தில் செயல்படுத்தத் தொடங்கியது.

பொறிஇயல் நிபுணர்கள் வந்து பார்த்து விட்டு, 'இந்த ரயில் பாதையை முழுவதுமாக அமைத்து முடிக்கக் குறைந்த பட்சம் ஆறு வருடங்களாவது ஆகும்' என்று சொல்லி விட்டார்கள்.

ஆனால் ஜப்பானிய ராணுவத்துக்கோ அதுவரை காத்திருக் கப் பொறுமையில்லை. ஆயிரக் கணக்கான போர்க் கைதிகள் தங்களிடம் அடிமைகளாக இருக்கும் போது இந்த வேலையை விரைவிலேயே முடித்து விடலாம் என்று அது கருதியது.



அவ்வளவுதான்; அங்கங்கே காவலில் வைக்கப்பட்டிருந்த போர்க் கைதிகளை ஆடுமாடுகள் போல் அவசரம் அவசரமாக இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள்.

ஆசியா, பிரிட்டன், ஆஸ்திரேலியா, அமெரிக்கா ஆகிய நாடுகளின் போர்க் கைதிகளைக் கொண்டு வந்து ரயில் பாதைக்கு வேண்டிய கல்லையும், மண்ணையும், இரும்பையும் அவர்கள் தலையிலும் முதுகிலும் ஏற்றினார்கள். கல்லிலும் முள் ளிலும் கால்கடுக்க நடக்க வைத்தார்கள். போதிய உணவும் ஓய் வும் இல்லாத காரணத்தாலும், கடுமையான உழைப்பாலும் அந்த வீரர்களில் பலர் நாளொரு எலும்பும் பொழுதொரு தோலு மாக மாறிச் செத்து மடிந்தார்கள்.

சுகாதாரமற்ற சூழ்நிலை, அடி உதை, வயிற்றுப் போக்கு, மஞ்சள் காமாலை, மலேரியா போன்ற கொடிய நோய்களால்

பாதிக்கப்பட்டு உயிரிழந்த கைதிகளுக்குக் கணக்கு வழக்கே இல்லை.

தாய்லாந்து பகுதியிலும் பர்மா பகுதியிலும் சேர்ந்து மொத் தம் நானூற்றுப் பதினைந்து கி.மீ. தூரம் நீண்டுள்ள இந்த ரயில் பாதையைப் பதினெட்டே மாதங்களில் போட்டு முடித்தனர்.

''உயிரிழந்த வீரர்கள் எத்தனை பேர் இருக்கும்?'' என்று விசாரித்தேன்.

''இந்த ரயில்பாதைக்குப் போடப்பட்டுள்ள ஸ்லீப்பர் கட் டைகள் எத்தனையோ அத்தனை பேர்'' என்று ஒரு கணக்குச் சொன்னார் கய்டு.

''மொத்தம் போடப்பட்டுள்ள ஸ்லீப்பர் கட்டைகள் எத் தனை?''

''எத்தனை வீரர்கள் உயிரிழந்தார்களோ, அத்தனை கட்டை கள்'' என்றார் கய்டு!

ரயில் பாதை அமைக்கப்பட்ட போது க்வாய் நதி குறுக்கிட் டதால் அதன் மீது ஒரு பாலம் கட்ட வேண்டியதாயிற்று.

முதலில் தாற்காலிகப் பாலமாகத்தான் அதைக் கட்டி முடித்தார்கள். அப்புறம் நிரந்தரமாகக் கட்டப்பட்ட பாலம்தான் இப்போது அந்த அப்பாவி ராணுவப் போர்க் கைதிகளுக்கு மௌன அஞ்சலி செலுத்திக் கொண்டிருக்கிறது.

அந்தப் பாலத்தைச் சுற்றிலும் ஏராளமான டூரிஸ்ட் பஸ்க ளும் ஓட்டல்களும் கடைகளும் சூழ்ந்து நிற்கின்றன. ஐம்பது வருடங்களுக்கு முன் அந்த இடம் எப்படி இருந்திருக்கும் என் பதை நம்மால் ஓரளவு ஊகிக்க முடிகிறது.

ஒரு மரத்தடி நிழலில் உட்கார்ந்து அந்தப் பாலத்தை 'ஸ்கெச்' செய்து கொண்டிருந்தார் வெளிநாட்டு ஆர்ட்டிஸ்ட் ஒருவர். அதைச் சிறிது நேரம் வேடிக்கை பார்த்து முடிந்ததும், ''சரி; எல்லாம் பார்த்தாச்சு; போக வேண்டியதுதானே?'' என்று கேட்டேன் ஸ்ரீ வேணுகோபாலனிடம். அவர் தயங்கினார்.

பாலத்துக்குச் சற்று தூரத்தில் சாதுவாக ஒரு ரயில் என்ஜின் நின்று கொண்டிருந்தது.

காமிராவும் கையுமாக அலைந்து தம்முடைய சரித்திரக்

கதைக்கு வேண்டிய ஆதாரங்களைப் புகைப்படமாக எடுத்துக் கொண்டிருந்த ஸ்ரீவே ''ஒரு நிமிடம், இதோ போய் அந்த என் ஜினை எடுத்து வந்துவிடுகிறேன்'' என்றார். போனவர் ரொம்ப நேரமாகியும் திரும்பவில்லை. ''என்ஜினைப் படம் எடுத்து வரு கிறேன் என்று போனவர் என்ன ஆனார்?'' என்று கவலைப்பட் டேன் நான்.

''ஒருவேளை என்ஜினையே தூக்கி எடுத்துக் கொண்டு வரப் போகிறாரோ என்னவோ!'' என்றார் ராணிமைந்தன்.

தினமும் மாலை நான்கு மணிக்கு அந்த என்ஜின் இந்தப் பாலத்தின் மீது ஒருமுறை போய்த் திரும்புவது வழக்கம் என் றும், சரித்திரத்தை சற்றே ஞாபகப்படுத்திக் கொள்ளும் வகை யில் இந்தச் சம்பிரதாயம் கடைப்பிடிக்கப்பட்டு வருவதாகவும் ஒரு தகவலைச் சொன்னார் கய்டு.

அந்த ரயில் பாதையை 'டெத் ரெயில்வே' என்று அழைக் கிறார்கள்.

பல்லாயிரக்கணக்கான போர்வீரர்களைக் கபளீகரம் செய்த அந்தப் பாலத்துக்கு இதைவிடப் பொருத்தமான பெயர் வேறு என்ன இருக்க முடியும்?





காஞ்சனபுரி 'ஸெமெட்ரி'க்குள் நுழையும்போதே ஒரு சோகம் நம்மைக் கவ்விக் கொள்கிறது. பயணம் செய்து வந்த சொகுசு வேனின் ஏ.ஸி. இதம், காதில் ஒலித்துக் கொண்டிருந்த இன்னிசையின் சுகம் எல்லாமே சட்டென்று மறைந்து மனம் பாறையாய்க் கனத்துப் போகிறது.

ஏறத்தாழ ஏழாயிரம் கல்லறைகள் கொண்ட அந்த இடம் ஓர் அழகிய நந்தவனம் போலக் காட்சி தந்தாலும், அந்தச் சூழ்நிலையில் ஓர் ஆழ்ந்த சோகமும் இழையோடிக் கொண்டிருக்கிறது.

கல்லறை ஒவ்வொன்றிலும் ஒரு வீரனின் பெயர், வயது, அவன் வகித்த பதவி போன்ற விவரங்களுடன், சின்னஞ்சிறு வாசகம் ஒன்றும் பொறிக்கப்பட்டுள்ளது.

ஒரு கல்லறையில், ''ஹி ஈஸ் நாட் டெட். ஹி ஈஸ் ஜஸ்ட் அவே'' என்று எழுதப்பட்டுள்ளது.

லான்ஸ் நாயக் கரம்தான், லான்ஸ் நாயக் என்.நயனமூர்த்தி, சிப்பாய் அப்துல் காலிக் போன்ற பெயர்களை அங்கே பார்த்த போது பெருமையாகவும், அதேசமயம் வேதனையாகவும் இருந்தது. இவர்கள் மூவரும் பஞ்சாப் ரெஜிமெண்ட்டைச் சேர்ந்த இளம் வீரர்கள் என்று கல்லெழுத்து சொல்லியது.

வரிசை வரிசையான கல்லறைகளுக்கு இடையே பச்சைப் பசேலென்ற புற்கள் பாய் விரித்திருக்கின்றன. தாய்லாந்து மண்ணில் தோன்றும் பச்சையின் அழகே தனி. ஒவ்வொரு கல்லறைக்கும் பக்கத்தில் வண்ண வண்ண மலர்களாய்ப் பூத்துச் சிரிக்கும் செடிகள்!

எவ்வளவுதான் மலர்களும், பசுமையும் சூழ்ந்திருந்த போதிலும் கல்லறை என்று வரும்போது கூடவே ஒரு அச்சமும்



சோகமும் இருக்கத்தான் செய்கின்றன. 'இங்கே இரவில் பேய், பிசாசுகள் நடமாட்டம் இருக்குமா?' என்று அங்கே பூச்செடிக ளுக்குத் தண்ணீர் ஊற்றிக் கொண்டிருந்த பெண் ஒருத்தியிடம் கேட்டோம்.

''சாயங்காலம் ஐந்து மணிக்கு மேல் இங்கே யாரும் தங்குவ தில்லை. இரவு நேரங்களில் ஆவிகளின் நடமாட்டம் இருப்பதா கச் சொல்கிறார்கள். அது உண்மையா என்று தெரியவில்லை. பகல் நேரங்களில் அவை நிச்சயம் வருவதில்லை. ஒரு வேளை உயிருள்ள மனிதர்களின் நடமாட்டத்துக்கு அஞ்சியோ என் னவோ!'' என்று சிரித்தார் அந்தப் பெண்மணி.

சற்றுத் தொலைவில் ஒரு கல்லறையின் முன் சோகமே வடி வமாக அமர்ந்திருந்தார் வயதான ஓர் அம்மையார்.

அருகில் சென்று பார்த்தபோது அவரது கண்களில் நீர்த் திரையிட்டிருப்பது தெரிந்தது. பூச்செண்டு ஒன்றைக் கல்லறை

யின் முன் வைத்து விட்டுக் குனிந்து முத்தமிட்டாள். பிறகு மண்டியிட்டுப் பிரார்த்தனை செய்துவிட்டு மெல்ல எழுந்து கைக்குட்டையால் கண்களைத் துடைத்துக் கொண்டாள். அவர் யார் என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பினோம். நேரில் விசாரிப்பதற்குத் தயக்கமாயிருந்ததால். அவர் போன பிறகு அந்தக் கல்லறையில் காணப்பட்ட பெயரைப் பார்த்தோம். ஆஸ்திரேலியாவைச் சேர்ந்த ஒரு போர் வீரன் என்று தெரிந்தது. அன்றுஅந்த வீரனின் பிறந்த நாளாம். அவனது கல்லறைக்கு வந்து மலர் வைத்துப் போன அந்தப் பெண்மணியின் துயரம் தோய்ந்த முகத்தை என்னால் மறக்கவே முடியவில்லை. இம்மாதிரியான காட்சி அந்த இடுகாட்டுக்குப் புதிதல்லவாம். ஏதாவது ஒரு கல்லறை முன் உறவுக்காரர்கள் யாராவது வந்து கண்ணீர் சிந்திக் கொண்டிருப்பது ஒவ்வொரு நாளும் நடைபெறும் நிகழ்ச்சியாம்!

''சற்று தூரத்தில்Jeath மியூஸியம் இருக்கிறது. அங்கே போகலாமா?'' என்று அழைத்தார் கய்டு.

தாய்லாந்து மக்களின் ஆங்கில உச்சரிப்பிலும், ஸ்பெல்லிங்கிலும் நிறைய வித்தியாசம் உள்ளன. ஆர் என்ற எழுத்தை அவர்கள் சரியாக உச்சரிப்பதில்லை. ராமா என்றால் லாமா என்கிறார்கள். அதுபோல் 'டெத் மியூஸியம்' என்பதில் ஸ்பெல்லிங்கை 'டி' போடுவதற்குப் பதிலாக மாற்றி 'ஜெ' போட்டிருக்கிறார்களோ என்று நினைத்தேன்.

"D க்குப் பதில் J போட்டிருக்கிறார்களே, இது தவறு இல்லையா?'' என்று கேட்டேன்.

''தவறு ஒன்றுமில்லை. யுத்தத்தில் பங்கேற்ற ஜப்பான், இங்கிலாந்து, அமெரிக்கா, ஆஸ்திரேலியா, தாய்லாந்து, ஹாலந்து ஆகிய நாடுகளின் முதலெழுத்துக்களைத் தொகுத்த போது உருவான சொல்லைத்தான் அப்படி JEATH என்று போட்டிருக்கிறார்கள்'' என்றார் கய்டு.

போர்க்காலத்தில் கைதிகள் எந்த மாதிரி மூங்கில் வீட்டுக்குள் அடைக்கப் பட்டிருந்தார்களோ அதே வடிவத்தில் அதே அளவில் ஒரு மூங்கில் வீட்டை உருவாக்கி அதிலேயே வீரர்கள் உபயோகித்த ஆயுதங்களையும், தட்டு, சரண்டி போன்ற பாண்டங்களையும் வைத்திருக்கிறார்கள்.

ஒரு போர்க் கைதியின் வாழ்க்கை அந்த நாளில் எத்தகைய

கொடூரம் நிறைந்தது என்பதை அக்கண்காட்சி விளக்கமாய்க் காட்டுகிறது.

குறிப்பாக க்வாய் நதியின் மீது பாலம் கட்டப்பட்ட போது அக்கைதிகள் பட்ட கஷ்டங்களையும் அனுபவித்த துன்பங்களை யும் பெரிய அளவில் என்லார்ஜ் செய்து வைத்திருக்கிறார்கள். நிர்வாணமாக அவர்களை நிற்கவைத்து அடிப்பது, ஒரு குவளை குடிநீருக்காக அவர்கள் காத்திருக்கும் பரிதாபம், பசி பட்டினியா லும் சத்துணவு இல்லாமையாலும் கொடிய நோய்களால் பீடிக் கப்பட்டு அல்லல்படுவது, - இப்படிப் பல்வேறு புகைப் படங்கள்.



மோசமான அரிசிச் சோற்றுடன் கொஞ்சம் உப்பு மட்டுமே தருவார்களாம்.

ஓரிடத்தில் கோயில் மணிபோல் கட்டிவிடப்பட்டிருந்த உலோகப் பொருளைப் போய்ப் பார்த்தோம்.

க்வாய் நதியின் அடியில் புதைந்து கிடந்த ஒரு வெடி குண்டை மீனவர்கள் கண்டெடுத்ததாகவும், பின்னர் அது பாதி யாக வெட்டப்பட்டு ஒருபாதி இங்கேயும் இன்னொரு பாதி வாங்யாய் ஆலயத்துக்கும் நன்கொடையாக வழங்கப்பட்டதா கக் குறிப்பு கூறுகிறது.

மியூசியத்தைப் பார்த்துவிட்டு வெளியே வந்தபோது 'ஃபர்கிவ், பட் டோண்ட் ஃபர்கெட்' என்று ஒரு வாசகம் வாயி லில் பொறிக்கப்பட்டிருக்கிறது. இந்த வாசகத்தை என்னால் முழுமையாக ஏற்றுக் கொள்ள முடியவில்லை.

''மறப்போம், மன்னிப்போம்' என்று அண்ணா கூறிய வாசகம் இதைக் காட்டிலும் உயர்வானதல்லவா, பொருள் செறிந்ததல்லவா - என்று எண்ணிக் கொண்டேன்.

''இன்னும் ஒன்றரை மணி நேரத்தில் பாங்காக் போய்ச் சேர்ந்து விடலாம்'' என்றார் டிரைவர். உடலில் சோர்வையும், உள்ளத்தில் சோகத்தையும் சுமந்துகொண்டிருந்த எங்களுக்கு தாகம் நாக்கை வறட்டியது. ''தாய்லாந்தில் ஆரஞ்சு ஜூஸ் தேனாய் இனிக்குமே! எங்காவது ஜூஸ் சாப்பிடலாமா?'' என்று கேட்டேன். எங்கள் கார் பழக்கடை ஒன்றின் முன் போய் நின்றது. தாய்லாந்தில் விளையும் அத்தனை பழ ரகங்களையும் கொலு வைத்தாற்போல் இருந்தது அந்தக் கடை.

அந்தப் பழங்களைப் போலவே பளிச்சென்று காணப்பட்ட இளம் பெண் ஒருத்தி சிரித்த முகத்துடன் இருகரம் கூப்பி எங் களை வரவேற்றாள்.

நம்மூர் சினிமா டைரக்டர்கள் கண்ணில் பட்டிருந்தால் இந்நேரம் குஷ்பு இரண்டாம் இடத்துக்குப் போயிருப்பார்!

அந்தப் பெண் இனிமையாய் இங்கிலீஷ் பேசினாள். குரலில் குளுமை வீசியது. படிக்கும் நேரம் போக வியாபாரத் தைக் கவனிப்பதாய்ச் சொன்னாள். இளநீர்க் காய்களை லாகவ மாய்ச் சீவி, ஸ்ட்ரா போட்டுக் கொடுத்தாள். ஒவ்வொருவரும் இரண்டு இளநீர் சாப்பிட்டோம். பை நிறையப் பழங்கள் வேறு



வாங்கிக் கொண்டோம். பல்வேறு பழங்களுக்கிடையே விதை நீக்கிய புளியம்பழமும் இடம் பெற்றிருந்தது. ''இதென்ன வேடிக்கை? புளியைக் கொண்டு வந்து வைத்திருக்கிறீர்களே?'' என்று கேட்டேன்.

''இதைச் சாப்பிட்டுப் பாருங்கள்'' என்று கொஞ்சம் சாம்பிள் கொடுத்தாள் அந்தப் பெண். வாயில் போட்டுப் பார்த்தேன். கற்கண்டாய் இனித்தது.

''இது ஒரிஜினல் புளியம்பழமாக இருக்க முடியாது..புளிய மரத்துக்கும் பேரீச்சை மரத்துக்கும் எங்கோ தப்புத் தண்டா நடந்திருக்கிறது'' என்றேன் நான்.

''அதெல்லாம் ஒன்றுமில்லை. இந்த ஊர் மண்ணில் விளையும் புளியம் பழம் இப்படித்தான் இனிக்கும்'' என்றார் டிரைவர்.

ஹோட்டலை அடைந்து படுக்கையில் சாய்ந்த பின்னும்

ஸ்ரீ.வே. சோகமாக, எதையோ பறி கொடுத்தவர் போலக் காணப் பட்டார்.

"என்ன ஆச்சு உமக்கு? கல்லறைச் சோகமா?"

"இல்லை; அந்த ஸ்வீட் புளியம்பழத்தில் ஒரு கிலோ வாங்கி வராமல் போய் விட்டோமே என்ற சோகம்தான்."

"உங்களுக்கு அந்தப் பழக்கடை அழகியை இன்னொரு முறை பார்க்க வேண்டும். அதற்குப் புளியம்பழம் ஒரு சாக்கு. அதுதானே!" என்றேன்.

**உ**லகப் போரின் போது போர்க் கைதியாகப் பிடிபட்ட ஜார்ஜ் வோகஸ் என்ற டச்சு ராணுவ வீரர் பின்னொரு சமயம் பாங்காக் ரோட்டரி கிளப் விழாவொன்றில் பேசியிருக்கிறார். அந்த உரையிலிருந்து சில வரிகள்:

"**எ**ன்னையும் என்னுடைய தந்தை, என் சகோதரர்கள் எல்லோரையும் ஜப்பானிய ராணுவம் 1942 மார்ச் மாதம் எட்டாம் தேதியன்று சிறைபிடித்தது. நாங்கள் அப்போது ஜாவா தீவில் இருந்தோம். எங்கள் ராணுவத்திலும் கிட்டத்தட்ட அறுப தாயிரம் வீரர்கள் இருந்தனர். ஏதோ புற்றீசல் கிளம்பியது போல லட்சக்கணக்கில் இந்த ஜப்பானியர் சின்னச் சின்ன சைக்கிள்க ளில் எங்களை நோக்கி வந்தார்கள். இந்தக் 'குள்ளர்கள்' ஏன் எங்களைக் கைது செய்தார்கள் என்று எனக்குப் புரியவில்லை.

நானும் என்னைப் போன்ற போர்க் கைதிகளும் கடல் வழி யாக முதலில் சிங்கப்பூர் சிறைச்சாலைக்குச் கொண்டு போகப் பட்டோம். பின்னர் அங்கிருந்து காஞ்சனபுரிக்குக் கால் நடையா கவே போய் சேர்ந்தோம்.

தினமும் இரவில் நடை. இது போல் பன்னிரண்டு இரவுகள் நடந்தோம். பகல் நேரத்தில் ஒப்புக்குக் கொஞ்சம் ஓய்வு எடுக்க அனுமதித்தார்கள்.

**க்**வாய் நதியோரம் பர்மா எல்லைவரை போர்க் கைதிக ளின் முகாம்கள் நிறுவப் பட்டிருந்தன. ஒரு முகாமைக் கட்டி முடிக்க இருநூறு கைதிகள் நியமிக்கப்பட்டார்கள். மூங்கில் கழி களும் மரத்துண்டுகளும்தான் எங்கள் குடியிருப்புக்கான சாதனங்கள்.

ரயில்பாதை அமைக்கப் பல மாதங்களாயின. குறுக்கே ஏறத்தாழ எண்பது பாலங்களைக் கட்ட வேண்டியதாயிற்று.

எங்கள் முகாமைச் சுற்றிப் பாதுகாப்பு வேலிகள் ஏது மில்லை. இருந்தாலும் எங்களால் தப்பியோட முடியாது. எங்க ளுக்குத் தரப்பட்ட சாப்பாடு படுமோசம். காலராவும், மலேரியா வும் எங்களைப் பற்றிக் கொண்டன. எங்களில் ஆஸ்திரேலியர் கள், ஆங்கிலேயர்கள், அமெரிக்கர்கள், டச்சுக்காரர்கள் எனப் பல்வேறு நாட்டினரும் இருந்தோம். வியாதி வந்தால் மருந்து மாத்திரை ஏதும் கிடையாது. ஒருநாளைக்குப் பதினாறு மணி நேரம் கடும் உழைப்பு. விடுமுறை என்ற சொல்லுக்கே விடு முறை தந்துவிட்டார்கள்.

என்னுடைய ஜப்பானிய நண்பர் ஒருவர் எப்போதாவது உப்புடன் கலந்த மீன் துண்டுகளைக் கொஞ்சம் தருவார். அவை தான் என் உயிரைத் தாங்கிப் பிடித்துக் கொண்டிருந்தன.

1943 ஆகஸ்டில் ரயில்பாதை முடிவுற்றதும் நாங்கள் காஞ்ச



னபுரிக்குத் திரும்ப அனுப்பப்பட்டோம். 'நாங்பிளாதுக்' என்ற இடத்தில் ஒரு முகாமில் நான் வைக்கப்பட்டேன். அங்கே ஜப்பானியர் வந்து வெள்ளைத் தோல் கொண்டவர்களைப் பிடித்து ஜப்பானுக்குக் கொண்டு போனார்கள். குளிரையும், பனியையும் வெள்ளைத் தோல் தாங்கும் என்பது அவர்களின் கணிப்பு.

ஆயில் டாங்க்கர் கப்பல் ஒன்றில் நாங்கள் மூவாயிரம் பேர் அமர்ந்து ஜப்பான் போனோம். கிட்டத்தட்ட ஒரு மாதம் துறை முகத்திலேயே உட்கார்ந்திருந்தோம். சாப்பாடு கிடையாது.

அழுக்கு கப்பியிருந்த எங்கள் துணிகளை அகற்றித் துவைக்கக் கொண்டு போனார்கள். நிர்வாணமாக நின்ற எங்களை நீச்சல் குளம் ஒன்றில் குளிக்க வைத்தார்கள். குளத்தின் விளிம்புகளில் ஜப்பானியப் பெண்கள் கையில் கழிகளோடும், துடைப்பங்களோடும் உட்கார்ந்திருந்தார்கள். அவர்கள் கையால் நாங்கள் அடிபட்டோம்.

ஜப்பானிய விதிகளுக்கேற்ப நாங்கள் 'சுத்த'மானதும் ஃபகுவோகா என்ற பகுதிக்குக் கொண்டு போகப்பட்டோம். நிறையப் பேர் தலையில் தொப்பியுடனும், விளக்கோடும் காணப்பட்டனர். அவர்களெல்லாம் சுரங்கத் தொழிலாளர்கள் என்பது புரிந்தது. விரைவில் நாங்களும் அவர்களோடு சேர்ந்து பூமிக்கடியில் முன்னூறு அடி ஆழத்தில் பணிபுரிந்தோம்.

கடைசியாக ஒருநாள் அமெரிக்கர்கள் எங்களை விடுதலை செய்தார்கள். வழியில் நான் அணுகுண்டு விழுந்த நாகஸாகியைப் பார்த்தேன்.

எனக்கு ஏற்பட்ட இந்தக் கொடுமையான அனுபவங்கள் உங்களில் யாருக்கும் நேர்ந்திருக்காது. நேரவும் கூடாது."





தாய்லாந்து மக்கள் எதை வேண்டுமானாலும் சகித்துக் கொள்வார்கள். ஆனால், தங்கள் அரசரைப் பற்றிய அவதூறான பேச்சை மட்டும் ஒருநாளும் பொறுத்துக் கொள்ள மாட்டார்கள்.

இப்போது ஆட்சி புரியும் மன்னர் பூமிபால் அவர்களை அந்த மக்கள் ஒரு தெய்வமாகவே வழிபடுகிறார்கள்.

பல்வேறு சாம்ராஜ்யங்கள் தாய்லாந்து மண்ணை ஆண்டு வந்தன என்றாலும், 1782ல் தொடங்கிய சக்ரி சாம்ராஜ்யம்தான் தாய்லாந்து சரித்திரத்தின் முதல் அத்தியாயமாய்க் கருதப் படுகிறது. ''ராமா மன்னர்களின் வரிசை ஆரம்பமே அது முதல்தான்'' என்றார் வழிகாட்டி.

''ராமா மன்னர்களா?''

''ஆமாம்... அவர்களை கிங் ராமா ஒன், கிங் ராமா டூ என்று தான் குறிப்பிடுகிறார்கள். இங்கிலாந்தில் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், ஆறாம் ஜார்ஜ் மன்னர் என்று சொல்கிற மாதிரி இப்போதைய மன்னர் பூமிபால் ஒன்பதாவது ராமா.''

ராமாயணத்தின் செல்வாக்கு எந்த அளவுக்குத் தாய்லாந்தில் வேரூன்றி இருக்கிறது என்பதற்கு இதைக் காட்டிலும் வேறு சான்று வேண்டியதில்லை.

முதலாம் ராமா தான் தாய்லாந்தின் தலையெழுத்தை மாற்றி எழுதிய பிரம்மா என்றும், தாய்லாந்து மொழிக்கு வரிவடிவம் கொடுத்த பெருமையும், தலை நகரைப் பாங்காக்குக்கு மாற்றிய சாதனையும் அவருடையதுதான் என்றும் சொன்னார்கள்.

அவருக்கு அடுத்தபடி மக்களால் மிகவும் போற்றப்பட்டவர் ஐந்தாம் ராமா மன்னர். புரட்சிகரமான திட்டங்களைப் புகுத்தி, மேற்கத்திய தொழில் நுட்பங்களைத் தம் நாட்டுக்கு

அறிமுகப்படுத்தியவர் - இந்த ஐந்தாம் ராமாதான் என்றும் சொன்னார்கள்.

தென்கிழக்கு ஆசியாவிலேயே காலனி ஆதிக்கத்துக்கு உட்படாமல் தப்பிய ஒரே நாடு தாய்லாந்து என்பதைக் கேள்விப்படும்போது சற்று வியப்பாகவே உள்ளது.

அதே போல் கம்போடியா, லாவோஸ், வியட்நாம் போன்ற கம்யூனிஸ நாடுகள் சுற்றிலும் சூழ்ந்திருக்கும் நிலையிலும் கம்யூனிஸ விதை தாய்லாந்து மண்ணில் விளையாமல் பார்த்துக் கொண்டதும் இந்த மன்னர்கள்தானாம்!

ஐந்தாம் ராமா வாழ்ந்த அரண்மனை இப்போது கண்காட்சியாக மாற்றப்பட்டிருக்கிறது என்று கேள்விப்பட்டதும் அந்த அரண்மையைப் பார்க்கும் ஆவலில் உடனே அங்கு போனோம்.

''இந்த அரண்மனை முழுவதும் தங்கத் தேக்கு மரத்தால் கட்டப்பட்டது. தேக்கு மரங்களால் ஆன இவ்வளவு பெரிய கட்டிடம் உலகில் வேறு எங்குமே கிடையாது'' என்று அடித்துச் சொன்னார் அரண்மனையைச் சேர்ந்த ஒரு சிப்பந்தி.

முப்பத்திரண்டு அறைகள் கொண்ட மிகப் பெரிய ராஜ மாளிகை.குளுகுளுவென்ற சூழ்நிலை. இதைவிட பிரம்மாண்டமான அரண்மனைகளை ரஷ்யா, ஃபிரான்ஸ், இங்கிலாந்து போன்ற நாடுகளில் நான் பார்த்திருந்தாலும் தேக்கு மரங்களின் முழு ஆக்கிரமிப்பை இந்த அரண்மனையில்போல் வேறெங்கும் காண முடியவில்லை. தாய்லாந்தின் தேசிய சொத்தான இந்த தேக்கு மரச் செல்வத்தைப் பற்றி நிறையச் சொல்ல வேண்டும்.

அரண்மனையைச் சுற்றிக்காட்டிய பெண் கய்டு பேசியது ஆங்கிலம் என்பதைப் புரிந்து கொள்ளவே சிறிது நேரமாயிற்று.

அப்படி துண்டு துண்டாகக் கொத்திக் கொத்திப் பேசினார்.

அரண்மனையில் ஓரிடத்தில் மாட்டப்பட்டிருந்த விக்டோரியா மகாராணியாரின் இளம் வயது புகைப்படம் ஒன்றைச் சுட்டிக்காட்டி, ''இந்தக் குழந்தை யாரென்று உங்களால் சொல்ல முடியுமா?'' என்று ஒரு புதிர் போட்டாள் அந்த கய்டு.

அங்கே வந்திருந்த டூரிஸ்ட் ஒருவர் ''பேபி விக்டோரியா'' என்று சொன்னதும் 'கலெக்ட்' என்று தாய்லாந்து உச்சரிப்பில் ஆமோதித்தார் கய்டு. அதாவது 'கரெக்ட்' என்பதைத்தான் அப்படிச் சொன்னாள்! வீதிகளில் செல்லும் போது தாய்லாந்து மொழி

யில் எழுதப்பட்டுள்ள ஸைன்போர்டுகள் பலவற்றைக் காண முடிகிறது. அதைப் பார்த்துவிட்டு ''இதென்ன, ஆங்கில எழுத்துக்களைத் தலைகீழாக எழுதியிருக்கிறார்களே!'' என்று கமெண்ட் அடித்தானாம் ஒரு சின்னப் பையன். உண்மை; அந்த வினோதமான எழுத்துக்களைப் பார்த்தபோது அப்படித்தான் தோன்றியது.

அரண்மனையைச் சேர்ந்த அத்தனை அறைகளையும் அதன் சுற்றுப்புறச் சூழலையும் பார்த்து முடிக்கவே ஒரு முழுநாள் தீர்ந்து போயிற்று.

'ஐயோ, ஒரு முழு நாள் போய்விட்டதே!'' என்று அங்கலாய்த்தார் நண்பர் ஸ்ரீவே.



''எப்படியோ, நமக்கு ஒரு முழுநாள் அரண்மனை வாசம் கிடைத்ததே, அதற்காகச் சந்தோஷப்படுங்கள்!'' என்றேன் நான்.

**பா**ங்காக்கின் பிரதான வீதிகள் எல்லாம் ராமா ஒன், ராமா டூ, ராமா த்ரீ என்று மன்னர்களின் பெயர்களைத் தாங்கியே அமைந்திருக்கின்றன. சின்னச் சின்னத் தெருக்கள் ஆங்காங்கே இந்த முக்கிய வீதிகளோடு சங்கமிக்கின்றன.

''மக்கள் அனைவரும் மன்னருள் அடக்கம் என்பதைச் 'சிம்பாலிக்'காகக் காட்டியிருக்கிறார்களோ, என்னவோ!'' என்றேன்.

''இல்லை, மகாராஜாதான் மக்களைத் தம்மோடு அப்படி அணைத்துக் கொண்டு செல்கிறார். நடுநாயகமாகச் செல்வது ராஜவீதி. அதோடு ஒட்டியுள்ள சின்னஞ்சிறு வீதிகளெல்லாம் மக்கள்!'' என்று விளக்கம் தந்தார் உடன் வந்த நண்பர்.

''பழைய மன்னர்களுக்கும் இப்போதைய ஒன்பதாவது மன்னரான பூமிபால் மகாராஜாவுக்கும் என்ன வித்தியாசம்?''

''பழைய மன்னர்களிடம் முழு அதிகாரமும் இருந்தது. இப்போது அப்படி இல்லை.இதை 'கான்ஸ்ட்டிட்யூஷனல் மானார்க்கி' என்கிறார்கள். அதாவது அரசியல் சட்டத்துக்குட் பட்ட அரச பரிபாலனம்'' என்று விளக்கம் தந்தார் கய்டு.

தாய்லாந்து அரசியலுக்கு இரண்டு முகங்கள் உண்டு. மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பாராளுமன்றம் ஒரு முகம். அதன் சிபாரிசின் பேரில் மன்னர் நியமிக்கும் 'செனட்' எனப் படும் ஆட்சிக்குழு இன்னொரு முகம்.

ஆக ஜனநாயகமும் மன்னராட்சியும் கைகோத்து இயங்கும் ஓர் அற்புதக்கலவைதான் தாய்லாந்தின் இப்போதைய ஆட்சி முறை. தேர்தல்,.எம்.பி. என்பது பற்றியெல்லாம் மக்கள் அவ்வளவாக அக்கறை காட்டுவதில்லை. அவர்களுக்கு மன்னர்தான் எல்லாமே. அவர் பேச்சுக்கு மறு பேச்சில்லை. மன்னர் வருகிறார் என்றால் மிக்க மரியாதயோடு நடு ரோடில் மண்டியிட்டு வணங்குவதை மனப்பூர்வமாய் மகிழ்ச்சியோடு செய்கிறார்கள். அரசர் தம்பதியரின் படம் இல்லாத வீடுகளோ, கடைகளோ, தொழிற்சாலைகளோ, அரசு அலுவலகங்களோ, பொது மண்டபங்களோ கிடையாது. முதலில் அரசர் படத்தைக் கொண்டு வந்து வைத்துவிட்டு அப்புறம்தான் கட்டட வேலையே தொடங்குகிறார்கள்!



இப்போதைய மன்னர் தம் அரண்மனையில் தங்கி இருக்கும் நேரத்தைக் காட்டிலும் மக்களிடையே கலந்து பழகும் நேரமே அதிகமாம்.

கிராமங்களுக்குப் போய் விவசாயிகளுடன் கலந்துரையாடுகிறார். விழாக்களில் கலந்து கொள்கிறார். பாராளுமன்றம்

செயல்படுத்தும் மக்கள் நலத் திட்டங்கள் தவிர, தாமும் பல் வேறு திட்டங்களைத் தீட்டிச் செயல்படுத்துகிறார்.

ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட நாளில் அரண்மனை வாசலில் விவசாயிகளுக்கு 'விதை வழங்கு விழா' என்று ஒரு பெரிய விழா நடைபெறுகிறது. ஏராளமான கிராம மக்களும் விவசாயிகளும் அந்த விழாவில் கலந்துகொள்கிறார்கள். சம்பிரதாயமான சடங்குகளுக்குப் பின்னர், மன்னரே தம் கையால் வழங்கும் விதையை வாங்கிக் கொள்ள மக்கள் மிகுந்த ஆர்வத்தோடு முண்டியடித்துக் கொண்டு செல்வார்களாம்! தாங்கள் சேமித்து வைத்துள்ள விதைகளுடன் அரசரிடமிருந்து பெற்றுச் செல்லும் விதையையும் கலந்து விதைத்தால் விளைச்சல் பல மடங்காகப் பெருகுவதாக ஒரு நம்பிக்கையாம். நாம் இங்கே ஆடிப்பட்டம் தேடி விதைப்பது மாதிரி அங்கே அரசர் தொட்ட விதையை ஓடிப் பெற்று விதைக்கிறார்கள்.

''எங்கள் மன்னருக்கு விவசாயத்தில் மிகுந்த ஆர்வம் உண்டு. அதைப் போலவே இசைக் கலையிலும் ஈடுபாடு அதிகம். பல இசைக் கருவிகளை மீட்டி இசைப்பதில் விற்பன்னர். குறிப்பாக ஜாஸ் இசையில் வல்லவர். அருமையாகப் பியானோ வாசிப்பார். அமெரிக்காவில் பிறந்து வளர்ந்தவராயிற்றே!'' என்று பெருமைப்பட்டுக் கொண்டார் கய்டு.

டி.வி.யில் ஒருநாள் கிட்டத்தட்ட இரண்டு மணி நேரம் மன்னர் பூமிபால் கலந்துகொண்ட பொது நிகழ்ச்சிகளை மக்கள் ஆர்வத்தோடு பார்த்து மகிழ்ந்தார்கள்.

டி.வி. காமிராகூட அவரை நேருக்கு நேர் சந்திக்காமல் சற்றுத் தள்ளி நின்றே பவ்யமாகப் பின் தொடர்கிறது.

தாய்லாந்தின் உயர் அதிகாரிகள், தளபதிகள் எல்லாருமே மன்னரின் முன் நின்று பேசும் போது ஒரு தனி மரியாதை காட்டுகிறார்கள். மன்னர் எப்போதும் ஜூம் லென்ஸ் பொருத்தப்பட்ட ஒரு காமிராவைக் கூடவே எடுத்துச் செல்கிறார். சிற்சில நிகழ்ச்சிகளை அவரே படம் எடுக்கிறார். மற்ற நேரங்களில் காமிராவைக் கணவரிடமிருந்து வாங்கி வைத்துக் கொள்கிறார் கூடவே செல்லும் அவரது மனைவி. ராஜாவும், ராணியும் எங்கும் சேர்ந்தேதான் போகிறார்கள். அப்படிப் போகும்போது சிற்சில சமயங்களில் ராணி தமக்குரிய தனி அந்தஸ்தோடு அரசருக்



மன்னருக்கு மக்களின் மரியாதை

குச் சற்றுப் பின் தள்ளியே வெண் கொற்றக் குடையின் கீழ் நடந்து செல்கிறார்.

இப்போதைய மன்னர் பூமிபால்தான் அதிக ஆண்டுகள் தொடர்ந்து (46 ஆண்டுகள்) ஆட்சி நடத்தி வருகிறவராம். ராஜ குடும்பத்தின் பெருமையும் கௌரவமும் எள்ளளவும் குறைய பூமிபால் அனுமதிப்பதில்லையாம். அதற்கு சாட்சியாக அரச குடும்பத்தின் குரூப் ஃபோட்டோ ஒன்றைக் காட்டினார்கள்.

அதில் ராஜா இருக்கிறார். அவருக்குப் பக்கத்தில் ராணி. ராணிக்குப் பக்கத்தில் ஓர் இடம் காலியாக விடப்பட்டுள்ளது. அப்புறம் இளவரசிகளின் வரிசை.

''இந்தக் காலி இடத்தில் நின்றிருக்க வேண்டியவர் யார்? அவர் எங்கே?'' என்று கேட்டேன்.

''ராணிக்கு அடுத்து மூத்த மகள் நிற்க வேண்டிய இடம் அது. ஆனால் அவரோ அரச குடும்பத்திலிருந்து சாதாரண ஒரு வரை மணம் புரிந்து கொண்டு வெளிநாட்டில் வாழ்ந்து வருகி றார். அதனால் அவரை அரச குடும்பத்திலிருந்து விலக்கி விட் டார்கள். அரச குடும்ப குரூப் போட்டோவை எங்கே பார்த்தா லும் அதில் மூத்த மகள் நிற்க வேண்டிய இடம் காலியாகவே இருக்கும்'' என்று விளக்கம் கொடுத்தார் கய்டு அபிதீன்.



# 6

''தமிழ் நாட்டுக்கு வருகிறவர்கள் ஊட்டி பார்க்காமல் போனால் எப்படியோ, அப்படித்தான் தாய்லாந்துக்குப் போகிற வர்கள் 'சாங்மாய்' பார்க்காமல் திரும்புவதும்'' என்றார் நண்பர் ஹுமாயூன்.

''சங்மாய்க்கு எப்படிப் போவது?'' என்று கேட்டேன்.

''பஸ் ரொம்ப வசதியாக இருக்குமே!'' என்றார்.

''பஸ்ஸிலா?''

''ஆமாம்; இங்கே டூரிஸ்ட் பஸ்களில் நீங்கள் பயணம் செய்து பார்த்ததில்லையா? ஒரு முறை போய்ப் பாருங்கள்'' என்று சொல்லி, நாங்கள் போவதற்கான எல்லா ஏற்பாடுகளை யும் செய்து கொடுத்தார்.

அது ஒரு ஏர்கண்டிஷன் லிமோஸின் பஸ் என்று சொல்லி அதை அவமானப்படுத்தக் கூடாது. தரையில் பறக்கும் குட்டி விமானம் என்று சொல்ல வேண்டும்.

விமானப் பணிப்பெண் போலவே சீருடை அணிந்த பணிப் பெண் ஒருத்தி அந்த பஸ்ஸுக்குள் பம்பரமாய்ச் சுற்றிக் கொண் டிருந்தாள். ஒவ்வொரு இருக்கையும் சரியாக இருக்கிறதா என்று சோதித்துப் பார்த்தாள். ஏ.ஸி.யின் இதத்தை அளவு பார்த்தாள்.

பஸ் கிளம்பியதும் வாசனை வெந்நீரில் ஊறிய துல்லிய மான தும்பைப் பூ போன்ற துணிச் சுருள் ஒன்றை தட்டில் ஏந்தி வந்து பயணிகளுக்குக் கொடுத்தாள். அதை சுடச் சுட முகத்தில் வைத்துத் துடைத்த போது இதமாக இருந்தது.

கைப்பிடியிலுள்ள பட்டனை அழுத்தினால் தலைப்பக்கம் தரையை நோக்கி முக்கால் பாகம் தாழ்ந்து கிட்டத்தட்ட படுக்கை போலாகி விடுகிறது.



பணிப்பெண் அட்டைப் பெட்டியில் கொடுத்த ஸ்வீட், ஆப்பிள் பழம்,லேசாக வறுக்கப்பட்ட கோழி இறைச்சித்துண்டு!

பணிப் பெண்ணை அழைத்து, ''ஸாரி... நான் வெஜிடேரியன்'' என்றேன்.

அவள் கொஞ்சம் கூடப் பதட்டப்படாமல், ''அப்படியா! நோ ப்ராப்ளம்! இதோ இப்போதே உங்கள் உணவைச் சைவமாக மாற்றி விடுகிறேன்'' என்றவள் அந்த இறைச்சித் துண்டைத் தனியாக எடுத்துக் கொண்டு 'நெள இட் இஸ் வெஜிடேரியன்!'' என்றாள்.

பஸ்ஸின் தாலாட்டிலும் போர்வையின் அரவணைப்பிலும் சுகமான தூக்கம் கண்ணைச் சுழற்றியது. விடியும் போதுதான் தூக்கம் கலைந்தது. கீழ் வானம் செவ்வரிகள் தீட்டியிருந்தன.

மீண்டும் வாசனை டவல்! கூடவே சுடச்சுட காப்பி!

கிட்டத்தட்ட எழுநூற்றைம்பது கிலோ மீட்டர் தூரம் பயணித்த அலுப்பே தெரியவில்லை.

சங்மாயில் இறங்கியதும் எங்கள் பெயர்கள் எழுதப்பட்ட அட்டையைக் கையில் ஏந்திக் கொண்டு நின்றிருந்தாள் இன்னொரு தாய்லாந்து அழகி. எங்களை வரவேற்று ஒரு காரில் அழைத்துச் சென்றாள்.

''இப்போது நாம் பாரடைஸ் கஸ்ட் ஹவுஸ் போகிறோம். அங்கேதான் குளியல், காலை உணவு எல்லாம். அப்புறம் முக்கிய இடங்களைப் பார்க்கப் போகிறோம்'' என்று அவள் அறிவித்துக் கொண்டிருந்த போதே கஸ்ட்ஹவுஸ் நெருங்கிவிட்டது.

'மெதுவாக' என்று தாய்லாந்தில் எந்தக் காரியமும் நடப்பதில்லை. எல்லாமே வேகம்தான்.

காரை விட்டு இறங்கி கஸ்ட் ஹவுஸ் ரிஸெப்ஷன் ஹாலுக்குள் போவதற்குள் அந்தப் பெண்மணி எங்கள் அறையின் சாவியைக் கொண்டு வந்து கொடுத்தாள்.

குறிப்பிட்ட நேரத்துக்குள் ரெடியாகிக் கீழே வந்தபோது வெள்ளைக்காரர் போல ஒருவர் எங்களை நோக்கி வந்து கை குலுக்கினார்.

''நான் சொம்பட். உங்கள் கய்டு. போவோமா?'' என்றார்.

இப்போது அவரே டிரைவர்.

காரில் போகும்போது நான் அவரிடம் கேட்ட முதல் கேள்வி: ''உங்கள் பெயர் என்ன சொன்னீர்கள்?''

''மேங்கோல் சொம்பட். சிலர் சுருக்கமாக 'ஸாம்' என்றும் அழைப்பார்கள்.''

''தமிழில் சம்பத் என்பது போல ஒலிக்கிறது அல்லவா!'' என்றார் ஸ்ரீவே. எங்கேயாவது இதுபோன்ற சொற்களைக் கேட்டால் உடனே ஆராய்ச்சியில் இறங்கி விடுவார் அவர்.

''என்ன சொல்கிறார் உங்கள் நண்பர்?'' என்று ஸ்ரீவேணு கோபாலனைச் சுட்டிக் காட்டிக் கேட்டார் கய்டு.

''எங்கள் ஊரில் சம்பத் என்று பெயர் உண்டு. உங்கள் பெயரும் கிட்டத்தட்ட அது மாதிரி ஒலிக்கிறது. சம்பத் என்றால் தமிழில் 'செல்வம்' என்று பொருள்'' என்று சொன்னேன்.

அவர் முகம் பிரகாசமாயிற்று!

''உங்களுக்குத் தெரியுமா? எங்கள் தாய்லாந்து மொழியி



லும் சம்பட் என்றால் கிட்டத்தட்ட அதே அர்த்தம்தான்'' என்றார் அவர். எங்கள் முகம் பிரகாசமாயிற்று!

தாய்லாந்து மொழியில் நிறையத் தமிழ்ச் சொற்கள் கலந்து கிடப்பதை எங்கள் பயணத்தின் போது தெரிந்து கொண்டோம்.

சொம்பட் பூனாவில் சில ஆண்டுகள் படித்தாராம்.பிறகு பெங்களூரில் சிலகாலம் தங்கியிருந்ததாகவும் சொன்னார்.

சங்மாய் என்ற பெயரைச்சரியாகச் சொல்வதானால் 'சியாங் மய்' என்றுதான் உச்சரிக்க வேண்டுமாம். தாய்லாந்தின் வடக்குப்

பகுதியில் உள்ள மிக முக்கியமான நகரம். 'வடக்கின் ரோஜா' என்று அதை வர்ணிக்கிறார்கள். அங்கு வாழும் பெண்களின் மேனியும் அப்படித்தான் இருக்கிறது.

கடல் மட்டத்திலிருந்து கிட்டத்தட்ட இரண்டாயிரம் அடி உயரம். சில்லென்ற குளிர் நம்மைக் கவ்விப் பிடிக்கிறது. பல் வேறு பட்சிகளின் இனிய இங்கிலீஷ் 'நோட்'டுகள்.

இயற்கையோடு ஹாயாக உறவாடி அதன் அழகை ரசிக்கி றோம். தூய்மையை சுவாசிக்கிறோம்.

தாய்லாந்து ஸில்க், நுணுக்கமான வேலைப்பாடுகள் மிக்க வெள்ளிச் சாமான்கள், அழகு விசிறிகள், வண்ணக் குடை கள் எல்லாமே உலகப் பிரசித்தம்.

குடைகளின் கம்பிக் கூரையில் துணிகளைப் பதித்து அவற் றின் மீது தூரிகையால் வெவ்வேறு டிசைன்களில் பூக்கள் வரை யும் பெண்களின் கைவிரல் வேகத்தை நாள் முழுதும் பார்த்துக் கொண்டிருக்கலாம்.

ஓரிடத்தில் காரை நிறுத்தினார்கள். ''தாய்லாந்து ஸில்க் குக்கு உலகமெங்கும் ஏக டிமாண்ட். பட்டு தயாரிக்கும் தொழி லில் இங்கே பல குடும்பங்கள் ஈடுபட்டிருக்கின்றன. அவற்றில் மிகத் தொன்மையான குடும்பம் வசிக்கும் ஒரு வீட்டின் வாயி லில்தான் இப்போது நின்று கொண்டிருக்கிறோம். உள்ளே போய்ப் பார்த்துவிட்டு வாருங்கள்'' என்று சொல்லி விட்டு வாசலிலேயே நின்று விட்டார் சொம்பட்.

பட்டுப் பூச்சிகளைக் கொதி வெந்நீரில் போடுவதில் தொடங்கி, பட்டுத் துணியில் டிசைன் போடுவது வரை அவ்வள வையும் அந்த வீட்டுக்குள் ஒரு கண்காட்சி போலப் பார்க்கலாம். சுற்றுலாப் பயணிகளுக்காக ஏற்பாடு செய்யப்பட்டுள்ள கண் காட்சி அல்ல இது. ஒரு குடும்பத்தின் தினசரி நடவடிக்கை யையே இப்படி கண்காட்சியாக்கி இருக்கிறார்கள்.

முகத்தில் சுருக்கம் நிறைந்த பாட்டியிலிருந்து பழம் போல் அழகு மேனியுடன் காணப்பட்ட கொள்ளுப் பேத்திவரை ஆளுக் கொரு வேலை பார்த்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் யாரோடும் பேசுவதில்லை. இம்மாதிரி குடும்பங்கள் சங்மாய் முழுதும் மண்டிக் கிடக்கின்றன.

ஸில்க்கில் மலர்கள், பர்ஸ், போட்டோஃப்ரேம், பூக்கூடை காலணி, கைப்பை, என்று என்னென்னவோ கைவினைப் பொருட்கள் தயாரிக்கும் வீடுகள்.

இவர்கள் உழைக்கும் அளவுக்குப் பணம் சம்பாதிக்க முடி வதில்லையாம். எனவே இங்குள்ள விவசாயிகள், நெசவுத் தொழில் செய்யும் குடும்பங்களுக்குக் கடன் சுமை அதிகமாகி தங்கள் வீட்டு இளம் பெண்களை பாங்காக் போன்ற பெரிய நகரங்களுக்கு அனுப்பி விடுகிறார்களாம். அப்படிப் போகும் இந்தப் பெண்கள் சில காலம் பாங்காக்கில் தங்கிப் பணம் சம்பா தித்துக் கொண்டு வந்து கடனை அடைக்கிறார்களாம்.

''அங்கே அவர்களுக்கு என்ன வேலை?'' என்று சொம்பட் டிடம் கேட்டேன்.

''உலகின் மிகப் பழமையான தொழில்தான்'' என்று கண் சிமிட்டிய சொம்பட் கொஞ்சம்கூடக் கூச்சமின்றி அது என்ன தொழில் என்பது பற்றி யதார்த்தமாகச் சொன்னார்.

அதை ஜீரணித்துக் கொண்டு அடுத்த கேள்வி கேட்க எனக்குச் சில நிமிடங்கள் தேவைப்பட்டன.

''இவர்கள் இப்படிச் சீரழிந்து போவது வீட்டுக்குத் தெரி யுமா?''

''தெரியுமாவது? பெற்றோர்கள்தானே வழியனுப்பி வைக்கிறார்கள்! தாய்லாந்தில் செக்ஸ் என்பது ஒரு பாவத் தொழில் அல்ல'' என்றார் சொம்பட்.





''இளம் பெண்கள் பணம் சம்பாதிக்க பாங்காக் போவது வடக்கிலிருந்து மட்டும்தானா, இல்லை...'' என்று இழுத்தேன்.

''இதில் வடக்கு, கிழக்கு, என்றெல்லாம் கிடையாது. வறுமை என்று வந்து விட்டால், அவர்கள் எந்தப் பகுதியிலிருந் தாலும் போக வேண்டியதுதானே! எனக்குத் தெரிந்த இரண்டு குடும்பங்கள் இப்போது இங்கே சங்மாயில் குடியேறியுள்ளனர். அவர்கள் பக்கத்து கிராமப் புறங்களைச் சேர்ந்தவர்கள். அவர்க ளுடைய பெண்கள் கூட பாங்காக் போயிருப்பவர்கள்தான். அந்தக் குடும்பத்தினரைப் பார்த்து விவரமாகப் பேசலாம். வருகிறீர்களா?'' என்று கேட்டார் சொம்பட்.

''இப்போதே போகலாம்'' என்று புறப்படத் தயாரானோம் நாங்கள்.

''மரச் சாமான்கள் நிறுவனம் ஒன்றைப் பார்க்க இப்போது நாம் போகப் போகிறோம். அதற்கு முன்பாக வழியில் இவர்களைப் பார்த்துவிட்டுப் போய்விடலாம்'' என்றார் சொம்பட்.

''மரக்கடையில் நமக்கென்ன வேலை?'' என்றேன்.

''அது சாதாரண மரக்கடை அல்ல. மிகப் பெரிது. மரத்தில் அற்புதங்கள் நிகழ்த்தியிருக்கிறார்கள். கலை அழகு மிக்க சிற்ப வேலைப்பாடுகள்!'' என்றார் சொம்பட்.

முதலில் உசன் டவுட்டா என்பவர் தங்கியிருந்த வீட்டுக்குப் போனோம். அங்கே உசன் டவுட்டாவை எங்களுக்கு அறிமுகப் படுத்தி வைத்தார் சொம்பட்.

மெலிந்த தேகம். லேசாகச் சுருக்கங்கள் விழுந்துள்ள முகம். உசன் டவுட்டா சட்டென்று எங்களுடன் பேச உடன்பட



வில்லை. கொஞ்சம் அழுத்தமாகவே இருந்தார். கல்லில் நார் உரிக்க வேண்டும் போலிருந்தது.

சொம்பட் அவரோடு சற்று நேரம் ஏதோ கிசுகிசுத்து விட்டு என்னிடம் வந்தார்.

''என்னவாம்?'' என்றேன்.

''என் குடும்பத்தைப் பற்றி இவர்கள் எதற்காக விசாரிக்கி றார்கள் என்று சந்தேகமாய்க் கேட்கிறார்'' என்றார் சொம்பட்.

''நீங்கள் அதற்கு என்ன பதில் சொன்னீர்கள்?''

''அவர்களெல்லாம் இந்தியாவிலிருந்து வந்துள்ள பத்திரி கைக்காரர்கள். இங்கே நமது வாழ்க்கை முறை, கலாசாரம் பற்றி யெல்லாம் எழுதப் போகிறார்கள். இவர்களிடம் சொல்வதில் தப்பில்லை என்று நான் தெளிவு படுத்தி விட்டு வந்திருக்கிறேன். நீங்கள் போய்ப் பேச ஆரம்பித்தால் சரியாகி விடுவார்'' என்றார்.

முகத்தில் சிரிப்பு காட்டாமல் சிறிது நேரம் இறுக்கமாகவே இருந்தார் டவுட்டா. (ரொம்பவும் பொருத்தமான பெயர்தான். எங்களைப் பற்றிக் கடைசி வரை 'டவுட்டா'கவே இருந்தார்) முதலில் எங்கள் கேள்விகளுக்குத் தலையை மட்டும் அசைத்துக் கொண்டிருந்தார். அப்புறம்தான் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பேசத் தொடங்கினார்.

''நீங்கள் எதற்காக கிராமத்தை விட்டு சங்மாய்க்கு வந்திருக்கிறீர்கள்?'' என்ற பேச்சைத் துவக்கினேன்.

''சும்மாத்தான் வந்திருக்கிறேன். இப்போது இங்கே குடைத் திருவிழா நடக்கிறது. அதையும் பார்த்தாற் போலிருக்கும் என வந்திருக்கிறேன்'' என்றார்.

'குடைத் திருவிழாவா! அதென்ன?' என்பது போல நாங்கள் வியக்க, ''அதை நாமும் பார்க்கலாம். முதலில் இவரிடம் பேசி முடியுங்கள்' என்றார் சொம்பட்.

உசன் டவுட்டாவின் குடும்பத்தில் எத்தனை பேர்? என்ன தொழில்? நெசவா? விவசாயமா? என்றெல்லாம் கேட்டபின் கடைசியாக ''உங்கள் மகள் பாங்காக் போயிருக்கிறாளாமே...?' என்றேன்.

லேசாகத் தலையசைத்து விட்டுச் சற்று நேரம் மௌனம்.

''எல்லாம் வயிற்றுப் பிழைப்புக்காகத்தான். அங்கே ஒரு ஹோட்டலில் வேலை பார்க்கிறாள்' என்றார்.

''ஹோட்டலில் என்ன வேலை?''

''ஹோட்டல் என்றால் 'எல்லாம்'தான்'' என்றார்.

அந்த 'எல்லாம்' என்ற சொல்லில் எல்லாமே அடக்கம்!

''உங்கள் சம்மதத்துடன்தான் அவள் போனாளா?''

''எங்கள் கிராமப் பகுதியில் வறட்சி. நிலமெல்லாம் வெடித்து விட்டது. விளைச்சல் இல்லாத காரணத்தால் வாங்கிய கடனுக்கு வட்டி கட்ட முடியவில்லை. அதிகாரிகள் மிரட்டலுக்குப் பதில் சொல்ல முடியவில்லை. பசி, பட்டினி என்று வாடினோம். நாங்கள் படும் துன்பங்களைப் பார்க்கச் சகிக்காமல்தான் என் மகள் 'தெற்கே' போய் சம்பாதிக்கப் போவதாய்ப் பிடிவாதம் பிடித்தாள்.''

''தனியாகவா?''

''இன்னும் சிலபெண்களும் போயிருக்கிறார்களே!''

''அவர்களுக்கு அங்கே யாரையாவது தெரியுமா?''

''தெரியாது. புரோக்கர் அழைத்துப் போயிருக்கிறார்.''

''புரோக்கரா? ஆணா, பெண்ணா?''

''பெண்தான்.''



ஹுமாயூன்

''அவள் ஏதாவது பணம் கொடுத்தாளா?''

''பதினைந்தாயிரம் பாட் இங்கேயே கொடுத்து விட்டுப் போய்விட்டாள்.''

''அப்படியானால் நீங்கள் உங்கள் பெண்ணைக் காசுக்கு விற்றிருக்கிறீர்கள். அப்படித்தானே?''

உசனின் முகம் சிவந்து, கோபம் தெரிந்தது.

''இன்னொரு தரம் இதுபோல் சொல்லாதீர்கள். நான் என் பெண்ணை விலை பேசவில்லை. எங்கள் குடும்ப நிலை கண்டு மனம் பொறுக்காமல் அவளே எடுத்த முடிவு இது. நான் வேண் டாமென்று தடுத்திருந்தாலும் அவள் என் பேச்சைக் கேட்டி ருக்க மாட்டாள். வீட்டை விட்டே ஓடியிருப்பாள். வேறு வழி இல்லாமல்தான் நானும் சம்மதித்தேன்.''

ஆக, கிளார்க் போல, டைப்பிஸ்ட் போல, நர்ஸ் வேலை பார்ப்பது போல தாய்லாந்தில் விபசாரமும் கிட்டத்தட்ட சமூகத் தில் அங்கீகரிக்கப்பட்ட ஒரு தொழிலாக கருதப்படுவது எனக்கு வியப்பாயிருந்தது.

அடுத்தாற்போல் நாங்கள் சந்தித்து குவான் சுயாங்கான் குடும்பம். கிட்டத்தட்ட உசன் குடும்பத்துக் கதை போலவே தான்.

அவர்கள் கிராமத்திலிருந்து 'பாங்காக்' போன முதல் பெண் குவானின் மகள்தானாம்.

உசன் டவுட்டா மாதிரி இவர் தயக்கம் காட்டவில்லை. சற்று வேகமாகவே பேசினார். தீரமான குரல்.

''என்னால் வெளியே தலை காட்டவே முடியவில்லை. கண்டபடி என்னைத் தூற்றினார்கள். வெகு காலம் நான் வீட்டுக் குள்ளேயே அடைபட்டுக் கிடந்தேன். பின்னர் என் மகள் பாங் காக்கிலிருந்து பணம் அனுப்ப அனுப்ப, என்னைத் தூற்றியவர்க ளெல்லாம் இப்போது மனம் மாறி என்னோடு பழையபடி பழக ஆரம்பித்திருக்கிறார்கள்.

''உங்கள் மகள் பற்றி அவர்கள் இப்போது கமெண்ட் ஏதும் அடிப்பதில்லையா?''

''எப்படி அடிக்க முடியும்? அவர்கள் வீட்டுப் பெண்களும் தான் இப்போது பாங்காங் போய்விட்டார்களே!''-சிரித்தார்.

நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டோம்.

''இப்போது எங்கள் கிராமத்தில் இளம் பெண்கள் யாருமே கிடையாது. எல்லோருமே பாங்காக் போய் விட்டார்கள். அது மட்டும் அல்ல. கிராமத்துக் கூரை வீடுகள் எல்லாம் இப்போது மாடி வீடுகளாக மாறிக் கொண்டிருக்கின்றன. எல்லாம் பாங்காக் பணம்!''

தன் மகளைப் பற்றி இப்படி வெளிப்படையாகவே விமரி சிக்கும் பெற்றோர்களை நான் சங்மாய் நகரில் தான் பார்த்தேன்.

''இதுதான் சியாங்மாய் சுதாலக் கம்பெனி. உள்ளே போய்ப் பாருங்கள்'' என்று எங்களை ஓரிடத்தில் இறக்கிவிட்டு ஒரு 'தம்' பற்ற வைத்துக் கொண்டார் சொம்பட்.

கலையழகு பொருந்திய மரச் சிற்பங்களைப் பெரும் அள வுக்கு ஏற்றுமதி செய்யும் பெரிய நிறுவனம் சுதாலக் கம்பெனி.

முகம் பார்த்துத் தலைவாரிக் கொள்ளும் அளவுக்கு மரத் தில் அப்படி ஒரு பாலிஷ்!

கைவிரல்களின் மந்திர வித்தைகள்!

பிரான்ஸ், அமெரிக்கா போன்ற நாடுகளிலிருந்து கோடீசுவ ரர்கள் இங்கே வந்து தங்கள் வீட்டுக்கு வேண்டிய மரச்சாமான் களை ஆர்டர் கொடுத்து விட்டுப் போகிறார்கள்.

சங்மாய்க்காரர்கள் மரச் சாமான்களில் மட்டும் தங்கள் கைவண்ணத்தைக் காட்டவில்லை. சங்மாய் முழுவதும் பரவி யுள்ள தொழில் கூடங்கள் பலவற்றிலும் கலைவண்ணம் கொட் டிக் கிடக்கிறது.

என் மனமெல்லாம் சற்று நேரம் முன்பாக உசன் டவுட்டா குறிப்பிட்ட குடைத் திருவிழா பற்றியே இருந்தது.

“அடுத்து?...'' என்று நான் இழுத்தேன்.

'குடைத் திருவிழா!'' என்று கய்டு கூறியதும் மகிழ்ச்சி தாங் கவில்லை.

திருவிழா என்றால் ஏதோ கோயில் சாமி - ஊர்வலம் என் றெல்லாம் எதிர் பார்க்காதீர்கள். குடைகளுக்குத் தரப்படும் மரி யாதைக்கு - அவற்றை உருவாக்கும் கை விரல்களின் கலைத் திறமைக்கு ஒரு 'விழா'வாக இதைக் கொண்டாடுகிறார்கள். கண்ணில் படும் இடமெல்லாம் குடைகள்தான்! கடைகளில், பெட்ரோல் பங்குகளில், ஹோட்டல் வாசலில் இப்படி எங்கே பார்த்தாலும் குடைகள்தான்.

''இந்தக் குடைகள் மழை வெயிலுக்குப் பயன்படுமா?''

''சாதாரண குடைகளைப் போல இவற்றை மடக்கவோ, விரிக்கவோ முடியும். துணிக் குடைகள்தான். ஆனால், மழையி லும் வெயிலிலும் இவற்றைக் கொண்டு போய் - அதன் மேல் உள்ள வண்ணங்களையும் ஓவியங்களையும் - பாழாக்க யாருக் கும் மனம் வராது. பெரும்பாலும் வரவேற்பு அறைகளில் அலங் காரப் பொருளாகத்தான் இதை வைத்திருப்பார்கள்!'' என்றார் சொம்பட்.

''கவர்ச்சி எப்போதும் கவைக்கு உதவாது என்பார்கள். இந்தக் குடையும் அப்படித்தான்'' என்று கூறிவிட்டுப் புறப்பட் டோம்.



அதை ஒரு விசிறிக் கடை என்று சொல்வது சரியல்ல. விசிறிக் கடல் என்பதே பொருத்தம். கண்ணுக் கெட்டிய தூரம் விசிறிகள், விசிறிகள், விசிறிகள்தான். நம் ஸூப்பர் ஸ்டார் ரஜினிக்குக் கூட அத்தனை விசிறிகள் உண்டா என்பது சந்தேகமே!

கான்வாஸ் போன்ற போர்டு ஒன்றைப் பொருத்தி அதில் விசிறியை விரித்து வைத்துக் கொண்டு, அதன் மீது பல தினுசான பூக்களையும் இயற்கைக் காட்சிகளின் எழிலையும் வரைந்து கொண்டிருந்தார்கள் சில பெண்கள்.

பச்சை வண்ணத்தில் தூரிகையைத் தோய்த்து விசிறியின் மீது லேசாக அங்குமிங்கும் மொத்தினால் பச்சைப் பசேரென்ற மரங்கள் இலை விரிக்கின்றன. இன்னொரு பிரஷ்ஷை எடுத்து அங்கே இங்கே நாலு கோடுகள் இழுத்தால் குடிசையும் படகும் காட்சி அளிக்கின்றன! நீல வண்ணத்தில் தூரிகை தோயும் வேகத்திலேயே அலைகள் தலை விரிக்கின்றன.

ஆசை தீரப் பார்த்த போதும் சலிப்பு தோன்றவில்லை.

'நேரமாகிறது, உம்' என்ற துரிதப்படுத்தினார் சொம்பட். அப்புறம்தான் சாங்மாய் நோக்கிப் புறப்பட்டோம். சில்லென்று குளிர் காற்று வீசிக் கொண்டிருந்ததால் விசிறியை உபயோகிக்க வாய்ப்பு இல்லை.

''இதெல்லாம் அலங்காரமாக மாட்டி வைக்கும் அழகு விசிறிகள்தான்' என்றார் சொம்பட். வழியில் புத்த பிட்சுக்கள் சிலர் கும்பலாக நடந்து போய்க் கொண்டிருந்தார்கள்.

''தாய்லாந்தில் மொத்தம் இருபத்தேழாயிரம் பௌத்த ஆலயங்கள் இருக்கின்றன. இருபத்தைந்தாயிரம் புத்த பிட்சுக்கள்



இந்த நாடு முழுதும் இரைந்து கிடக்கிறார்கள். புத்த நாகரிகத்தின் தொட்டில் இந்த சாங்மாய்தான்'' என்றார் சொம்பட்.

பிட்சுக்கள் எங்கும் தனியாகப் போகமாட்டார்களாம். இரண்டு பேராகவோ அல்லது கும்பலாகவோ சேர்ந்தேதான் போவார்களாம். தனிமையில் செல்வது பிரம்மசரியத்துக்குச் சோதனையாக முடியலாம் என்ற அச்சமே காரணமாம்.

''யாராவது ஒரு புத்த பிட்சுவைப் பார்த்துப் பேசவேண்டும். அது முடியுமா?'' என்று சொம்பட்டிடம் கேட்டேன். அந்த ஆசை அடுத்த ஒரு மணி நேரத்துக்குள்ளாகவே நிறைவேற்றி விட்டார் அவர்.

''ஸயாம் அரிசி உலகப் பிரசித்தமானது. அந்த அரிசி விளைவது இங்கேதான். பல நிலங்கள் வானம் பார்த்தவை. வங்கிகள் விவசாயிகளுக்கு நிறையக் கடன் தருகின்றன. ஆனாலும், வங்கியின் பிடியில் சிக்கிக் கொண்டு விவசாயிகள் ரொம்ப

வும் சங்கடத்துக்கு ஆளாகிறார்கள்'' என்று சொல்லிக் கொண்டே வந்த சொம்பட் காரை ஓரிடத்தில் நிறுத்தி ''இங்கே தான் புகழ் பெற்ற தாய்ஸ் உதேப் கோயில் உள்ளது. இறங்கிப் போய்ப் பார்க்கிறீர்களா?'' என்று கேட்டார் சொம்பட்.

''கோயிலா? அது எங்கே?'' என்று கேட்டேன்.

''அதோ... மேலே பாருங்கள், தெரியும்...''

பார்த்தேன். தலை சுற்றியது.

''முன்னூறு படிகள் ஏறிச் செல்ல வேண்டும். முடியுமா?'' என்று கேட்டார் சொம்பட்.

''வேண்டாம்; நான் இங்கிருந்தபடியே பார்த்து விடுகிறேன்'' என்றேன்.

கடகடவெனச் சிரித்தார் கய்டு.

அவர் சிரிக்கும்போதே, பழனி மலையில் உள்ளது போன்ற இழுவை ரயில் ('விஞ்ச்') ஒன்று வந்து எங்களருகில் நின்றது.

அதில் ஏறிக் கொண்டதுதான் தாமதம்; அடுத்த சில நிமிடங்களில் கோயிலுக்குப் போய்ச் சேர்ந்தோம்.

கோயில் வாசலில் கண்டாமணிகள் எழுப்பிய 'டாங் டாங்' ஓசையில் ஊரே அதிர்ந்தது.

வெளிப்பிராகாரத்தைச் சுற்றி வந்து கொண்டிருக்கையில் ஒரு போர்டில், ''ஒழுங்கற்ற உடைகள் அணிந்துள்ளவர்கள் உள்ளே போகக்கூடாது'' என்று எழுதப்பட்டிருந்தது.

''ஒழுங்கற்ற உடைகள் என்றால் என்ன?'' என்று விளக்கம் கேட்டேன் சொம்பட்டிடம்.

''மினி ஸ்கர்ட், அரை நிஜார், தொடை தெரிகிறாற்போன்ற உடை இதெல்லாம்தான்'' என்றார் அவர்.

''டூரிஸ்ட்களில் முக்காலே மூணு வீசம் பேர் முக்காலே மூணு வீசம் உடம்பு தெரிகிற மாதிரி ஒழுங்கற்ற உடை அணிந்து கொண்டு திரிபவர்களாய்த்தானே இருக்கிறார்கள்? அவர்களெல்லாம் கோவிலுக்குள் போய்ப் பார்க்க முடியாதா?''

''முடியும்?''

''எப்படி?''





''அதோ பாருங்கள்'' என்று சற்று தூரத்தில் கும்பலாய்த் தெரிந்த சிலரைச் சுட்டிக் காட்டினார்.

அவர் காட்டிய இடத்தில் பர்மூடா ஸ்டைல் அரை நிக்கர்க ளில் நாலைந்து ஐரோப்பியப் பெண்கள் நின்று கொண்டிருக்க அவர்கள் இடுப்பைச் சுற்றிக் கட்டிக் கொள்ள பெட்ஷீட், போன்ற துணியைக் கொடுத்துக் கொண்டிருந்தார் அந்தக் கோயி லைச் சேர்ந்த ஒருவர்.

அதைக் கட்டிக் கொண்டால் உள்ளே போகலாமாம்.

அந்தப் பெண்கள் ஒரு வழியாக 'தத்தக்கா பித்தக்கா' என்று பெட்ஷீட்டைக் கட்டிக் கொண்டு உள்ளே போனார்கள்.

**தா**ய்ஸ் உதேப் கோயில் உருவான விதமே தனி. புத்தர் பெருமானின் எலும்பு ஒன்றை இங்கே கொண்டு வந்து வைத்து அதன் மீது கோயில் கட்ட வேண்டுமென்று முடிவு செய்யப்பட்

டதாகவும், கோயிலை எங்கே கட்டுவது என்ற பிரச்னை எழுந்த போது அந்த எலும்பை ஒரு வெள்ளை யானையின் மீது வைத்து அனுப்பி, அந்த யானை எங்கே போய் நிற்கிறதோ அங்கே கட்டு வது என்றும்,அப்படி புத்தரின் எலும்பைச் சுமந்து வந்த யானை இந்த இடத்தில் நின்றதால் இங்கேயே தாய்ஸ் உதேப் கோயில் உருவானதாகவும் ஒரு செய்தியைச் சொன்னார்கள்.

உயரமான இந்தக் கோயிலுக்குப் போவதில் இரண்டு லாபம் உண்டு. ஒன்று, கோயிலைப் பார்ப்பது. இன்னொன்று அந்த உயரமான இடத்திலிருந்து சாங்மாய் நகரை முழுமையா கப் பார்த்து விடுவது.

''அது என்ன அங்கே? பெரிதாக மாட்டு வண்டி ஒன்று நிற்கிறதே!'' என்று விசாரித்தேன்.

''இந்தக் கோயில் கட்டப்பட்டபோது தொழிலாளர்க ளைத் தினமும் இந்த மாதிரி வண்டிகளில்தான் மேலே கூட்டி வருவார்கள். பின்னர் இரவு வீடு கொண்டு போய்ச் சேர்ப்பார் கள். கட்டிட வேலைக்கான சாதனங்களும் இந்த வண்டிகளில் தான் வரும். அந்த வண்டிகளில் ஒன்றை மட்டும் நினைவுச் சின்னமாக இங்கே வைத்திருக்கிறோம். கிட்டத்தட்ட அறுநூறு வருடத்திற்கு மேல் ஆகிவிட்ட சரித்திர கால வண்டி இது!'' என்று விவரித்தார் சொம்பட்.

ஹால் போன்றஓர் அறைக்குள் அந்தக் கோயிலின் வரலாறு கண்காட்சியாக வைக்கப்பட்டிருந்தது.

அங்கே பல்வேறு நாட்டு கரன்ஸி நோட்டுகளைக் கண்ணா டிப் பெட்டி ஒன்றில் வைத்திருந்தார்கள்.

டூரிஸ்ட்டுகள் தங்கள் நாட்டு கரன்ஸிகளை அங்கே போட்டு விட்டுப் போவார்களாம். நம் நாட்டு நூறு ரூபாய், ஐம்பது ரூபாய் நோட்டுகள் கூட அங்கே இருந்தன. இரண்டு ரூபாய், ஒரு ரூபாய் நோட்டுகளை மட்டும் காணவில்லை. ஒரு ரூபாய் நோட்டு ஒன்றையும் இரண்டு ரூபாய் நோட்டு ஒன்றையும் மட் டும் அந்தப் பெட்டியில் போட்டுக் குறைந்த செலவில் அந்தக் குறையைப் பூர்த்தி செய்து விட்டு வந்தேன் நான்!

உள்ளே போனபின்பு அடுத்த முக்கால் மணி நேரத்துக்கு எங்களை ஆக்ரமித்துக் கொண்ட உணர்வு பிரமிப்புதான்.

ஏராளமான புத்தர் சிலைகள்! நம்மூர் கோவில்களில் அறு

பத்து மூவர் சிலைகளை வரிசையாக வைத்திருப்பார்களே, அந்த மாதிரி!

ஓரிடத்தில் பெரிய புத்தர்சிலை ஒன்று தனியாக இருந்தது. தங்கக் காகித ரேக்குகள் அந்தச் சிலை மீது பளபளத்துக் கொண்டிருந்தன!

''இதெல்லாம் அசல் தங்கமா?'' என்று கேட்டேன்.

''ப்யூர் கோல்ட் ஷீட்! அசல் தங்கத்திலான மெல்லிய காகிதம். விலை பத்து பாட்டிலிருந்து ஐம்பது பாட் வரை. அவரவர்கள் தங்கள் சக்திக்குத் தக்கபடி வாங்கி வந்து ஒட்டிவிட்டுப் போகிறார்கள்'' என்றார் கய்டு.

''பொன் வைக்கிற இடத்தில் பூ வைப்பது என்று சொல்வார்கள். இங்கே பூ வைக்கிற இடத்தில் பொன் வைக்கிறார்கள்' என்று எண்ணிக் கொண்டேன்.

''சரி; இந்தத் தங்கத்தையெல்லாம் என்ன செய்வார்கள்?''

''கோவில் நிர்வாகத்துக்கு எப்போது தேவைப்படுகிறதோ அப்போது சிலை மீதுள்ள தங்கத்தைச் சுரண்டியெடுத்து. ஆலயப் பணிகளுக்குப் பயன்படுத்திக் கொள்வார்கள்'' என்றார் கய்டு.

''இங்கேயும் 'சுரண்டல்' உண்டா?'' என்று வியந்தார் ஸ்ரீவே.

''சுரண்டல் உண்டு. கோயில் தங்கத்தைக் கோயில் அதிகாரிகளே அதிகார பூர்வமாக நாலு பேர் அறியச் சுரண்டி எடுப்பார்கள்'' என்றார் சொம்பட்.

''எங்கள் ஊர் சுரண்டல் வித்தியாசமானது. கண் திருஷ்டிப் பட்டு விடும் என்பதால் ரகசியமாக யாரும் பார்க்காத நேரத்தில் சுரண்டி எடுத்து விடுவார்கள்!'' என்றேன்.

கோயிலுக்குப் போய் பிராகாரத்தைச் சுற்றி வந்தவுடன், சற்று இளைப்பாறுவதற்காக ஒரு மூலையில் போய் உட்கார்ந்து கொண்டோம்.

''அதோ நாலைந்து புத்த பிட்சுக்கள் வருகிறார்களே, அவர்கள் யாருடனாவது பேச முடியுமா, கேட்டுப் பாருங்களேன்' என்று சொம்பட்டிடம் ஞாபகப்படுத்தியதுதான் தாமதம், அடுத்த நிமிடம் வேகமாகப் போய் புத்த பிட்சு ஒருவரை அழைத்துக் கொண்டு வந்து விட்டார் அவர்!



நாங்கள் சந்தித்த புத்த பிட்சுவின் பெயர் கிர்த்திகுலோ. முப்பதே வயது நிரம்பிய அந்தத் துறவியின் முகத்தில் இளமையைவிட அறிவு முதிர்ச்சியே அதிகம் பளிச்சிட்டது.

நீண்டகாலமாக என்னுள் முடங்கிக் கிடந்த ஒரு சந்தேகத்தை அவரிடம் தெளிவுபடுத்திக் கொள்ள விரும்பினேன்.

''புத்த மதமோ அகிம்சையைப் பிரதானமாகப் போதிக்கிறது. ஆனால், புத்தமதம் ஆழமாகப் பரவியுள்ள தாய்லாந்திலோ பெரும்பாலான மக்கள் அசைவ உணவுப் பழக்கத்தைக் கொண்டிருக்கிறார்கள். இது முரண்பாடாக இல்லையா?''

இந்தக் கேள்வி கிர்த்திகுலோவிடம் எந்தவித சலனத்தையும் ஏற்படுத்த வில்லை. புன்முறுவலோடு என்னைப் பார்த்தார்.

''உணவுப் பழக்கம் என்பது அவ்வளவு எளிதாக வளைந்து கொடுத்து விடக் கூடியதல்ல. மேலும் புத்தமதக் கோட்பாடுகள் ஒருவரின் உணவுப் பழக்கத்தின் மீது எந்தவித கட்டுப்பாடும் விதிக்கவில்லை. அவரவர்களின் விருப்பத்திற்கு விட்டு விடுகிறது என்பதைத் தவிர வேறு விளக்கம் ஏதுமில்லை'' என்றார்.

அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது நான் தெரிந்து கொண்ட சில விவரங்கள்:

இருபத்திரண்டு வயதுக்கு மேற்பட்ட எவரும் புத்த பிட்சுவாக மாறலாம். இதற்குச் சில அடிப்படைப் பயிற்சிகள் தேவை. பிட்சுவாக மாறியபின் அவர்கள் குடும்பத்தாருடன் சேர்ந்திருக்க அனுமதி இல்லை. எனினும், இனி புத்த பிட்சு வாழ்க்கை வேண்டாம் என்று எப்போது முடிவெடுத்தாலும் அப்போதே அவர்கள் குடும்ப வாழ்க்கைக்குத் திரும்பி விடலாம்.

பெண்கள் பிட்சுக்களாக மாற அனுமதி இல்லை.



நாடகம், சினிமா போன்ற பொழுது போக்கு அம்சங்களில் பிட்சுக்கள் நாட்டம் கொள்ளக் கூடாது. ஆயினும் டி.வி.யில் உலகச் செய்திகளைப் பார்த்து, தங்கள் பொது அறிவை வளர்த்துக் கொள்ளலாம்.

இதையெல்லாம் அவர் சொல்லிக் கொண்டிருந்த போதே, அடுத்து அவரை என்ன கேள்வி கேட்கலாம் என்று யோசித்து வைத்துக் கொண்டேன்.

'இப்படி இளம் வயதில் பிட்சுக்களாக மாறுகிறவர்கள் என்னதான் மனக் கட்டுப்பாட்டோடு இருந்தபோதிலும்

இளமை உணர்வுகள் ஏதேனும் ஒரு தருணத்தில் தலைதூக்கி அவர்களைச் சலனப்படுத்தாதா? எப்படி அவர்கள் இந்தச் சல னங்களை வெல்கிறார்கள்?' என்பதே அந்தக் கேள்வி.

பிட்சுவின் குழந்தை முகத்தில் ஒரு சிரிப்பு தவழ்ந்தது!

''அப்படி எந்த ஒரு சூழ்நிலையிலும் மனம் தடுமாறி விடக் கூடாது என்பதால்தான் நாங்கள் எங்கேயும் தனித்துப் போவ தில்லை. தடுமாற்றத்துக்குள்ளாக நேரிடும் துறவியை உடன் செல்லும் துறவி எச்சரித்துக் காப்பாற்றுவார்.''

''புத்தமதம் போதிக்கும் முக்கிய உபதேசங்கள் என்ன என்று சொல்ல முடியுமா?''

''கொல்லாமை, பொய் சொல்லாமை, திருடாமை, மது அருந்தாமை, பிறன் மனை நோக்காமை. இந்த ஐந்தும் முக்கிய மானவை.''

அந்தக் கோவிலில் நாங்கள் இருந்த இரண்டு மணி நேரமும் உள்ளத்தூய்மையும் உன்னத உணர்வும் பெற்றோம்.

'என்ன, புறப்படலாமா?' என்பதற்கு அடையாளமாக சொம்பட் தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தார்.

''மலை இறங்கி நெடுந்தூரம் பயணம் செய்து ஊர் போய்ச் சேர வேண்டும். நாளை காலை நீங்கள் பாங்காக்கில் இருக்க வேண்டும் அல்லவா?'' என்றார்.

கோயிலிலிருந்து திரும்புகிறவர்களும், கோவிலுக்குள் போகிறவர்களுமாக அந்தப் பகுதியே கலகலப்பாக இருந்தது. சர்வதேச மக்களின் ஒரு குறுக்கு வெட்டுத் தோற்றம். பல்வேறு உடைகளில் பல்வேறு நாட்டைச் சேர்ந்த டூரிஸ்ட்டுகளுக்கு இடையே அங்கங்கே ஆரஞ்சு வண்ண ஆடையில் பளிச்சிடும் புத்த பிட்சுக்கள்!

கீழே இறங்கியபோது அதுவரை நாங்கள் காணாத காட்சி ஒன்றைக் கண்டோம்.

சுற்றுலாப் பயணிகள் சிலர் தங்கள் கையில் சிறிய கூண்டு ஒன்றை வைத்திருந்தார்கள். சில கம்பி வலையாலும், சில மூங் கில் குச்சிகளாலும் ஆனவை. அந்த கூண்டுகளுக்குள் சிறைப்பட் டிருந்த தாய்லாந்துக் குருவிகள் கீச்சுக் கீச்சென்று மெலிதான குரலில் சத்தமிட்டுக் கொண்டிருந்தன.

கூண்டைக் கையில் ஏந்திக் கொண்டு நின்ற சிலர் கண்களை மூடி ஏதோ தியானம் போல் செய்துவிட்டு அந்தக் கூண்டைத் திறக்கவும் அந்தக் குருவிகள் விடுதலை பெற்று வானில் பறக்கின்றன.

''என்ன இது?'' என்று கய்டைக் கேட்டேன்.

''மலையடிவாரத்தில் இந்தப் பறவைகளைக் கூண்டோடு விற்பனை செய்கிறார்கள். அதைச் சிலர் விலைக்கு வாங்கிக் கொண்டு வந்து ஏதேனும் ஒரு காரியம் கைகூட வேண்டுமென வேண்டிக் கொண்டு கூண்டைத் திறந்து விடுகிறார்கள். இதனால் அவர்கள் வேண்டிக் கொண்ட காரியம் நிறைவேறும் என்பது தாய்லாந்துக்காரர்களின் நம்பிக்கை'' என்றார் சொம்பட்.

''சரி, இங்கே தாய்லாந்து மக்களை விட மற்ற நாட்டு மக்கள்தானே அதிகமாக இருக்கிறார்கள்?''

''கய்டுகள் 'இப்படிச் செய்யுங்கள்' என்று பயணிகளுக்குச்



சொல்வார்கள். அல்லது பயணிகளே புத்தகம் எதிலாவது இந்த நம்பிக்கை பற்றிப் படித்து விட்டு வந்திருப்பார்கள்.''

''நீங்கள் மட்டும் ஏன் எங்களிடம் இதைச் சொல்ல வில்லை?'' என்று கேட்டேன்.

''இது ஒரு மூட நம்பிக்கைதான். எதையோ சொல்லிப் பறவைகளை விற்க வேண்டும். ஒரு வியாபார யுக்தி. எனக்கு இதில் நம்பிக்கை இல்லை. எனவேதான் நான் இதைப் பற்றி யாரிடமும் விவரிப்பதில்லை.''

சாங்மாய் புறப்படுமுன் நண்பர் சொம்பட் அவசர அவசர மாக மலர்ச்செண்டு விற்கும் கடையை நோக்கி விரைந்தார்.

சில வினாடிகளில் அழகாக 'பாக்' செய்யப்பட்ட மலர்க் கொத்து ஒன்றைக் கையோடு கொண்டு வந்தார்.

''திஸ் இஸ் ஃபார் மை கேர்ள் ஃப்ரண்ட்'' என்று மகிழ்ச்சியுடன் சொன்னார்.

''ஓ! உங்களுக்கு கேர்ள் ஃப்ரண்ட் இருக்கிறாளா!''

''எஸ்; நான் அவளை வெகுவாக நேசிக்கிறேன். அடுத்த ஆண்டு திருமணம். இதோ பாருங்கள்'' என்று தன் பர்ஸைத் திறந்து அதிலிருந்த அந்தப் பெண்ணின் போட்டோவைக் காட்டினார்.

கள்ளம் கபடின்றி வெளிப்படையாகப் பேசுவது தாய் லாந்து மக்களின் பண்புகளில் ஒன்று.

பாங்காக் நண்பர் ஒருவர் சொன்னது எனக்கு அப்போது நினைவுக்கு வந்தது.

''இந்த நாட்டு மக்கள் ரொம்பவும் வெளிப்படையாகப் பேசுவார்கள். நான் இங்கே வந்த புதிதில் என் அலுவலகத்தில் வேலை செய்யும் பெண் ஒருத்தியுடன் பேசிக் கொண்டிருந் தேன். அந்தக் கம்பெனியில் நான் அப்போதுதான் சேர்ந்திருந் தேன். ஒருநாள் அந்தப் பெண், ரொம்பச் சோர்வாகக் காணப்பட் டாள். 'ஏன் சோர்வாக இருக்கிறாய்? உடம்பு சரியில்லையா?' என்று கேட்டேன்.

'அதெல்லாம் ஒன்றுமில்லை. வழக்கமான சோர்வுதான். இப்போது எனக்கு மாதத் தொந்தரவு. மூன்று நான்கு நாட்கள் இப்படித்தான் இருக்கும். அப்புறம் சரியாகிப் போய்விடும்' என்று வெகுளியாகச் சொன்னாள்.''

மலைப் பாதை வளைவுகளைக் கடந்து சமவெளிக்கு வந்ததும் சாங்மாய் நோக்கி வேகமாகப் பறந்தது ஸிமோஸின்.

வழியெங்கும் தென்னந்தோப்புகள். கரும்பு சாகுபடி சீசன் ஆனதால் கரும்பு லாரிகள் சாலையில் சாரி சாரியாய் விரைந்து கொண்டிருந்தன. ஒரு தோப்பின் ஓரமாக எங்கள் கார் போய்க் கொண்டிருந்தது. ஆள் நடமாட்டம் எதுவும் காணோம். ஆனால் தொப் தொப் என்று தேங்காய்கள் மரத்திலிருந்து விழும் சப்தம் மட்டும் கேட்டது.

காரை நிறுத்திவிட்டு, ''உங்களுக்கு ஒரு வேடிக்கை காட்டு கிறேன். வாருங்கள்'' என்று கய்டு எங்களைத் தோப்புக்குள் அழைத்துப் போனார்.

தேங்காய் விழுந்து கொண்டிருந்த மரத்தைக் காட்டி ''அங்கே பார்த்தீர்களா?'' என்று கேட்டார்.



மரத்தின் மீது பெரிய குரங்கு ஒன்று ஜம்மென்று காய்க ளைத் திருகித் திருகிக் கீழே போட்டுக் கொண்டிருந்தது.

தேங்காய்களைப் பறித்துப் போடுவதற்கென்றே இங்கே குரங்குகளைப் பழக்கியிருக்கிறார்கள். எஜமான் உத்தரவு கிடைத்ததும் இவை மரத்தின் மீது வேகமாக ஏறிப் போய் தேங் காய்களைப் பறித்துப் போட்டபடி மரத்திற்கு மரம் தாவும். ஆட் கள் கூடவே போய் தேங்காய்களைச் சேகரித்துக் கொள்வார்கள். சில ஆட்கள் காய்களைப் பொறுக்கிக் கொண்டுபோய் பெட்டி வண்டியில் போட்டுக் கொண்டிருந்தனர்.

இங்கே நம் ஊரில் குரங்காட்டிகள் குரங்குக்குக் குங்குமம் பூசி, சட்டை போட்டு ''ஆடு ராமா, ஆடு ராமா'' என்று ஆட்டி வைத்துப் பணம் பண்ணுகிற மாதிரி, அங்கே 'ஏறு ராமா... மரம் ஏறு ராமா'' என்று மரம் ஏறித் தேங்காய் பறிக்கக் கற்றுக் கொடுத் திருக்கிறார்கள்!

பொழுது சாயும் நேரம். ஓரிடத்தில் நைட் பஜார் ஒன்று அன்றைய பரபரப்புக்குத் தயாராகிக் கொண்டிருந்தது. அந்த நைட் பஜாரில் பழங்குடி மக்களின் கடைகள் நிறைய இருந்தன. சின்னச் சின்னதாய்ப் பலவகை பொருட்கள். மரத்தில் சின்னச் சின்ன யானைகள் செய்து விற்பார்கள் என்றும், விலை கேட் டால் அசல் யானை விலை சொல்வார்கள் என்றும் கேள்விப் பட்டிருக்கிறேன். பேரம் பேசி வாங்கவேண்டும் என்றார் சொம் பட். பேரம் பேச நேரம் இல்லாததால் ஓரமாகக் கடைகளைப் பார்த்துக் கொண்டே வேகமாக வந்து விட்டோம்.

மீண்டும் பணிப்பெண் உபசாரம், அட்டைப் பெட்டியில் உணவு, வாசனை டவல்...

நீண்ட நெடுந்தூரப் பயணத்துக்குப் பின் விடியற்காலை பாங்காக் போய்ச் சேர்ந்தோம். அலுப்பு, களைப்பு எதுவுமே தெரியவில்லை. தலைக் கிராப்புக் கூடக் கலையவில்லை.

நாங்கள் தங்கியிருந்த ஹோட்டல் வரவேற்பறையில் எங்க ளுக்கு ஒரு செய்தி காத்திருந்தது.

''இன்று காலை பதினொரு மணிக்கு திரு மறைக்காடன் அவர்கள் தங்களைச் சந்திக்க வருகிறார்.''

மறைக்காடன் அவர்களைப் பற்றி பாங்காக்கில் தெரியாத



வர்களே இல்லை. நான் சந்தித்த எல்லாத் தமிழ்ப் பிரமுகர்க ளுமே முதல் கேள்வியாக 'மறைக்காடனைப் பார்த்து விட்டீர் களா?' என்று கேட்கத் தவறவில்லை.

ஏற்கனவே, மறைக்காடன் அவர்களுடன் தொலைபேசி யில் தொடர்பு கொண்டு சந்திப்பு நேரம் கேட்டிருந்தோம்.

''போன் செய்துவிட்டு நானே வந்து தங்களைச் சந்திக்கி றேன்'' என்று அவர் சொல்லியிருந்தார்.

அந்தச் செய்திதான் இப்போது வரவேற்பறையில் காத்திருந்தது.

மறைக்காடன் எனும் இத்தனை சுத்தமான தமிழ்ப் பெய ருக்கு ஏதேனும் பின்னணி இருக்க வேண்டும் என்று தோன்றி யது. அவர் யார் என்கிற விவரம் தெரிந்ததும் அந்தப் பெயரின் பின்னணியும் புரிந்தது.

தமிழ் மொழியோடு இணைந்து வாழ்ந்த அற்புதமான ஒரு குடும்பத்தின் வாரிசுதான் மறைக்காடன்!



# 10

திரு மறைக்காடன் அவர்கள் சொன்ன நேரத்துக்குத் தம்முடைய பென்ஸ் காரில் வந்திறங்கினார்.

கோட்டும் ஸூட்டுமாய் உடை. உள்ளேயோ வளமான தமிழ் நெஞ்சம். 'இன்னும் சற்று தமிழ் பேச மாட்டாரா?' என்று ஏங்க வைக்கும் நேர்த்தியான பேச்சு.

மறைக்காடனுக்குத் தமிழ்ப் பற்று இருப்பதில் ஆச்சரிய மில்லை. மறை மலையடிகளாரின் பேரன் தமிழ்ப்பற்று உடைய வராயிருப்பதில் என்ன ஆச்சரியம்! வேதாரண்யன் என்ற தமது இயற்பெயரைத்தான் மறைக்காடன் என்று தமிழ்ப்படுத்திக் கொண்டிருக்கிறார்!

ஐ.ஓ.பி.யின் சேலம் கிளையில் கிளார்க்காகச் சேர்ந்த மறைக்காடன் பின்னர் அந்த வங்கியின் ஹாங்காங் கிளையின் உயர் பதவிக்கு மாற்றலாகியிருக்கிறார். ஹாங்காங்கில் நீண்ட காலம் பணிபுரிந்தபின் ரிடயராகி தாய்நாடு திரும்ப எண்ணிய போது 'பாங்க் ஆஃப் ஓமன்' இவரை இந்தியாவுக்குத் திரும்ப விடவில்லை. இவரது திறமை பற்றி அறிந்திருந்த அந்த பாங்க் இவருக்குச் சிவப்புக் கம்பளம் விரித்து வரவேற்று இவரை ஒரு சர்வதேச வங்கிப் பறவையாகச் சிறகடிக்க வைத்தது.

இப்போது டெய்ஷ் வங்கியில் அதன் துணைப் பொது மேலாளராக வீற்றிருக்கிறார். இவ்வளவு பெரிய பதவி என்பது பலருக்குக் கனவோடு நின்று போகக் கூடிய ஒன்று. அந்த உன்னத சிம்மாசனத்தில் உட்காரும் வாய்ப்புப் பெற்ற தமிழர் அநேகமாக இவர் ஒருவராகத்தான் இருக்கும் என்று சொன்னார்கள்.

அலுவலகப் பணி நிமித்தமாகப் பல்வேறு நாடுகளுக்குப் பறந்து கொண்டிருக்கும் இவர் தாம் எங்கே இருந்தாலும் தம் குடும்பத்துக்கும் தமிழுக்கும் உள்ள தொடர்பு அறுந்து போய்



குவாய் நதிப் பாலத்துக்கருகே
வைக்கப்பட்டுள்ள
ஒரு வெடி(க்காத) குண்டு

நடிகை போல் தோற்றமளித்த
பழக்கடை அழகி











விடக் கூடாது என்பதில் கண்ணும் கருத்துமாக இருக்கிறார். இந்த லட்சியத்துக்காகவே தம் இரண்டாவது மகள் நந்தினியை சென்னை எத்திராஜ் கல்லூரியில் படிக்க வைத்திருக்கிறார். நந்தினி இறுதியாண்டு எம்.ஏ. படித்துக் கொண்டிருக்கிறார். மற்றொரு மகள், மூத்தவர். திருமணமாகிக் கணவருடன் இல்வாழ்க்கை நடத்தி வருகிறார்.

மிகச் சிறந்த வங்கியாளர் என்பதால் பாங்காக்கில் இருந்தபடியே இந்தியப் பொருளாதாரத்தின் நாடியைப் பிடித்துப் பார்க்க முடிகிறது இவரால்.

''ஏட்டுச் சுரைக்காய் கொள்கைகளுக்கு இந்தியா உடனடியாக விடை கொடுத்து அனுப்பிவிட வேண்டும். கறிக்குதவும் சிந்தனைகளுக்கு மட்டுமே செயல்வடிவம் தர வேண்டும்.

தனியார் துறைக்கு இன்னும் வேகமாகக் கதவுகளைத் திறந்து விட வேண்டும். அரசியல் வாழ்வில் நேர்மையைக் கடைப்பிடிக்க வேண்டும். ஜாதிமத வேறுபாடுகளை, அரசியல் அநியாயத்தை அடியோடு விட்டு விட வேண்டும். இங்கு நான் எந்த இந்தியப் பிரமுகரைச் சந்திக்க நேர்ந்தாலும் இதைச் சற்று உரக்கவே சொல்லிக் கொண்டிருக்கிறேன்'' என்றார் மறைக்காடன்.

தாய்லாந்து மொழியில் கலந்து விட்ட தமிழ், சமஸ்க்ருத சொற்களைப் பற்றி இவர் ஒரு குட்டி ஆய்வே நடத்தியிருக்கிறார் என்று தெரிந்து கொண்டேன்.

தாய்லாந்தில் மல்லிகைப் பூவுக்கு மல்லி என்றுதான் பெயராம். செண்பகப்பூ அங்கேயும் ஷெண்பகம் தானாம்!

தாய்லாந்து மக்கள் சாப்பாட்டுப் பிரியர்கள். வாரத்தில் ஒருநாள் சாப்பாட்டை வீட்டுக்கு வெளியில் வைத்துக் கொள்வது என்பது இந்நாட்டு மக்களின் பழக்கம். ''தி வே டு வின் ஹார்ட் இஸ் த்ரு ஸ்டமக்' என்பது தாய் மக்களின் தத்துவம்'' என்று சொல்லிவிட்டுச் சிரிக்கிறார்.

இந்தியா பற்றி இவருடைய கணிப்பு ஆழ்ந்த சிந்தனைக்கு உரியது.

''டாக்டர் மன்மோகன்சிங் சரியான பாதையில் அடியெடுத்து வைத்திருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. தனியார் துறையை ஊக்கப்படுத்தினால் வெளிநாட்டு மூலதனம் நம்மைத் தேடி வரும். தாய்லாந்தைப் பாருங்கள். இன்றைக்கு இந்நாட்டின் வளர்ச்சியைப் போல கிழக்கில் வேறெங்குமே இல்லை. ஜப்பானைச் சேர்ந்த பெரிய பெரிய தொழிலதிபர்களின் பார்வை இப்போது தாய்லாந்து மேல் விழுந்திருக்கிறது. இன்னும் பத்தே ஆண்டுகளில் தாய்லாந்தின் தொழில் முகம் அடையாளமே தெரியாத அளவுக்கு மாறிவிடும். ஜப்பானுக்கே சவால் விட்டாலும் ஆச்சரியமில்லை.''

''திருப்பாவையும், திருவெம்பாவையும் இங்கே நம் ஊர் போலவே ஓதுகிறார்கள். அப்படி ஓதுகிறவர்கள் தமிழகத்திலிருந்து வந்த பிராம்மணர்களாய்த்தான் இருக்க வேண்டும். அரச குடும்பத்தில் எந்த விசேஷம் நடந்தாலும் இவர்களுக்குத் தனி மரியாதை உண்டு. அரசர் பங்கேற்கும் விழாக்களில், அவர்

தொடங்கி வைக்கும் சடங்குகளை நடத்தி வைப்பதும் இவர்கள் தான்.''

திருப்பாவை, திருவெம்பாவை பற்றி மறைக்காடன் குறிப் பிட்ட போது காஞ்சிப் பெரியவர் தம்முடைய அருள் வாக்கில் சொல்லியுள்ள ஒரு செய்தியை அப்படியே நினைவு படுத்திக் கொண்டேன்:

''ஹிந்து நாகரிகச் செல்வாக்கானது பல தேசங்களில் குறிப் பாக கீழ்த்திசை நாடுகளில் ஜீவகளையுடன் ஏற்பட்டது ஒரு நிலை. இந்தக் காலகட்டத்தில்தான் அங்கோர் வாட், பேரா புதூர், ப்ரம்பானன் போன்ற பெரிய பெரிய தமிழ்நாட்டுக் கோவில்கள் அங்கே எழும்பின. இந்த கட்டத்தில்தான் நம்முடைய திருப்பாவையும், திருவெம்பாவையும் கூட ஸயாமுக்குச் சென்றிருக்கின்றன.



இதற்குச் சான்றாக இப்போதும் ஸயாம் தேசத்தில் ஆண்டு தோறும் அதே மார்கழி மாதத்தில் ஒரு பெரிய உற்சவம் நடக்கிறது. இந்த உற்சவத்தில் பெருமாளுக்குரிய டோலோற்சவத்தை (ஊஞ்சலில் வைத்து ஆட்டுவது) சிவபெருமான் வேடத்தைப் போட்டுக் கொள்கிற ஒருத்தனுக்குச் செய்கிறார்கள். 'சரி... அவர்களுக்குப் 'பாவை' நூல்களைப் பற்றி ஏதாவது தெரியுமா?' என்று கேட்டால் அடியோடு ஒன்றுமே தெரியாது என்றுதான் சொல்ல வேண்டும். அப்படியானால் இந்த உற்சவம் மார்கழி மாதத்தில் நடக்கிறது என்பதற்காக மட்டும் அதைப் பாவைகளோடு சேர்த்துப் பேசுவதற்கு ஆதாரமில்லை என்று தோன்றலாம். பின் நான் ஏன் இப்படிச் சொல்கிறேன் என்றால், அவர்கள் இந்த உற்சவத்துக்குப் பெயரே 'ட்ரியம்பாவை, ட்ரிபாவை' என்கிறார்கள். இப்போது பைபிள் படிப்பவர்களுக்கு உபநிடத சமாசாரமே தெரியாவிட்டாலும், அதிலிருந்து வந்த கதை மாத்திரம் அவர்களிடம் இருப்பது போலத்தான். தாய்லாந்துக்காரர்களுக்கு இப்போது திருப்பாவை, திருவெம்பாவை. பாராயணம் அடியோடு விட்டுப் போய்விட்டது என்றாலும், அவர்கள் இதே மார்கழி மாதத்தில் சிவவேடம் போட்டுக் கொண்டவனுக்காக நடத்துகிற டோலோற்சவத்துக்கு 'ட்ரிம்பாவை', 'ட்ரிபாவை' என்ற பெயர் மட்டும் இருக்கிறது.''

''உண்மைதான்; இங்கே சமீபத்தில் உள்ள ஒரு சிவன் கோயிலில் மார்கழி மாதத்தில் திருப்பாவை திருவெம்பாவை பாராயணம் செய்கிறார்கள். பிராம்மணர்கள்தான் செய்கிறார்கள். அவர்களுக்குத் தமிழ் தெரியவில்லை. பல ஆண்டுகளுக்கு முன் நம் நாட்டிலிருந்து வந்தவர்களாயிருக்கலாமோ என்று தோன்றுகிறது. குடுமி வைத்துக் கொண்டிருக்கிறார்கள். வேட்டியைக் கீழ்ப் பாய்ச்சியாகக் கட்டிக் கொள்கிறார்கள். நீங்கள் வேண்டுமானால் போய்ப் பார்க்கலாம்'' என்றார் மறைக்காடன்.

''மிகப் பெரிய தமிழறிஞரின் பேரன் நீங்கள். மறைமலையடிகளாரின் குணங்கள், பழக்க வழக்கங்களில் ஏதேனும் உங்களிடம் படிந்திருக்கிறதா?'' என்று கேட்டேன்.

''அவரது பேரன் என்பது எனக்குத் தனிப் பெருமையே! ஆனால், அவரது பழக்க வழக்கங்களை என்னால் கடைப்பிடிப்பது முடியாத காரியம். அவர் நள்ளிரவு பன்னிரண்டு மணிக்கு எழுந்து பாதம் பருப்பும், சேமியாவும் சாப்பிடுவார். மூன்று மணிவரை விழித்திருந்து படிப்பார். எழுதுவார். பின்னர்



தூங்கப் போய் காலையில் பதினொரு மணிக்குத்தான் எழுந்தி ருப்பார். அவர் வழியே தனி'' என்றார்.

''இந்த ஊரில் பழமையான மாரியம்மன் கோவில் ஒன்று இருக்கிறதே, அதைப் போய்ப் பார்த்தீர்களா?'' என்று கேட்டார் மறைக்காடன்.

''இல்லை; நாளைக்குத்தான் பார்க்கப் போகிறோம்.''

இப்போது மாரியம்மன் ஆலயத்தைப் புதுப்பித்துக் கொண் டிருக்கிறார்கள். இந்தத் திருப்பணியில் மறைக்காடனின் பங் கும்,உதவியும் மிக அதிகம் என்று நண்பர்கள் சொல்லி யிருந்தார்கள். அதைப்பற்றி விசாரித்த போது, ''ஏதோ என்னால் முடிந்த அளவு - அணில்பிள்ளை பங்கு!'' என்றார் அடக்கமாக.

மறுநாள், பொங்கல் திருநாள்.

'என்ன ரெடியா?' என்று கேட்டுக் கொண்டே அறைக்குள் வந்தார் நண்பர் சரவணன். சுறுசுறுப்பான இளைஞர். காரைக்கு டியைச் சேர்ந்தவர். கையில் டெலிபோனுடனேயே சுற்றுகிறார். ஜெம் பிஸினஸ் செய்கிறாராம். பெல்ஜியத்தில் சில மாதங்கள் இருந்து, பின்னர் இங்கே கடந்த பன்னிரண்டு வருடங்களாக 'பிஸினெஸ்' செய்து வருகிறாராம்.

மாரியம்மன் கோயிலின் ஒவ்வொரு அங்குலத்தையும் சரவணன் தெரிந்து வைத்திருக்கிறார். அதன் திருப்பணியில் மிகுந்த அக்கறையுடன் பாடுபட்டு வருகிறார்.

''பாங்காங்கில் உருவான முதல் இந்துக் கோவில் இதுதான். தமிழர்களால் கட்டப்பட்ட ஆலயம்.

இந்தக் கோவில் இப்போது புதுப் பொலிவு பெற்று வருகி றது. ஆலயத்திருப்பணிகள் நடந்து முடிவடையும் தறுவாயில் உள்ளன. இன்னும் சில மாதங்களில் கும்பாபிஷேகம் நடக்கப் போகிறது. அந்தச் சமயம் நீங்கள் இங்கே வரவேண்டும்'' என்று அழைப்பு விடுத்தார்.

நவராத்திரி விழாவின் கடைசி நாளன்று இதோ இந்த சிலோம் ரோடு முழுவதுமே மூடப்பட்டு விடும். அன்று அம்மன் ஊர்வலம் நடைபெறும். அதற்காக இந்த ரோடில் போக் குவரத்து முழுமையாக இராது. தாய்லாந்து மக்களின் சொந்தத் திருவிழாக்களில் கூட இப்படி ரோடை அடைப்பதில்லை. இது நம் நாட்டுக்கு அவர்கள் காட்டும் மரியாதை. நம் தெய்வத்தின் மீது அவர்கள் வைத்துள்ள பக்திக்கும் நம்பிக்கைக்கும் அடையா ளம். அது மட்டுமல்ல; தாய்லாந்து மன்னரும், அரசாங்கமும் இந்தியருக்குக் காட்டும் ஆதரவையும் இதிலிருந்து புரிந்து கொள்ளலாம்.

''தாய் நாட்டில் பொங்கல் கொண்டாட முடியாது போனா லும், தாய்லாந்தில் அதுவும் நம் தமிழ்க் கோவிலில், பொங்கல் திருநாளன்று இருக்க முடிந்ததைப் பெருமையாகவும் பெரும் பேறாகவும் கருதுகிறேன்'' என்றேன் நான்.

''சாப்பிடக் கொஞ்சம் பொங்கல் கிடைத்தால், இன்னும் சந்தோஷமாக இருக்கும்!'' என்றார் ஸ்ரீவே.

''கொஞ்சம் என்ன? நிறையவே கிடைக்கும்!'' என்று சொல்லி எங்களைப் பிராகார வெளிக்கு அழைத்துப்போய்



அங்கே ஒரு பக்கத்தில் விநியோகமாகிக் கொண்டிருந்த பொங்கல் பிரசாதங்களை வாங்கி வந்து கொடுத்தார் சரவணன்.

''ஏழைகளுக்கு அன்னதானம் செய்ய விருப்பப்பட்டாலும், அதை ஏற்றுக் கொண்டு சாப்பிடும் அளவுக்கு இங்கே எந்த ஏழையும் வருவதில்லை. அதனால் நாங்கள் சமைத்த உணவை அம்மனுக்குப் படைத்து விட்டு எங்களுக்குள்ளேயே பகிர்ந்து கொள்ள வேண்டியிருக்கிறது'' என்றார்.

மகாமாரியம்மன் ஆலயத்தில் நம்மவர்கள் மட்டுமல்ல; சீனர்கள், தாய்லாந்து மக்கள் எல்லோருமே ஒருங்கிணைந்து ஒருமுகமாக வழிபடும் அதிசயக் காட்சி கண்டு வியந்தோம்.

மத நல்லிணக்கம், இந்து முஸ்லிம் ஒற்றுமை, தேசிய ஒருமைப்பாடு என்றெல்லாம் இங்கே மேடை அதிரப் பேசுகிறோம். பக்கம் பக்கமாக எழுதுகிறோம். இந்த நாட்டில் நமக்குக் கனவாக இருப்பதெல்லாம் தாய்லாந்தில் நனவாகியிருப்பதை நேரில் கண்டு மகிழ்ந்தோம்.



மாரியம்மன் ஆலயத்தைப் பார்த்து விட்டுத் திரும்பும் போது நண்பர் சரவணன் சொன்னார்:

''இன்று நீங்கள் இல்யாஸைச் சந்திக்கிறீர்கள். அவர் வீட்டில்தான் உங்களுக்குப் பகல் சாப்பாடு!''

ஹாங்காங்கில் அய்யூப், சிங்கப்பூரில் யாகப், பாரிஸில் ஜமால், பாங்காக்கில் ஹுமாயூன் என்று ஏற்கனவே பல முஸ்லிம் அன்பர்களின் நட்பைப் பெற்றிருக்கிறேன். இப்போது இல்யாஸும் அந்தப் பட்டியலில் சேரப் போகிறார் என்பதை எண்ணியபோது என் மகிழ்ச்சி இரட்டிப்பாயிற்று.

நண்பர் ஹுமாயூன்தான் எங்களை 'உட்லண்ட்ஸ் இன்' ஓட்டலில் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருந்தார். அது மிக வசதியான ஓட்டல் என்றும், அதன் சொந்தக்காரர் இல்யாஸ் தமிழ் நாட்டைச் சேர்ந்த சிதம்பரத்துக்காரர் என்றும் நாங்கள் அவசியம் தெரிந்து கொள்ள வேண்டிய பிரமுகர் என்றும் கூறியிருந்தார். இல்யாஸ் சிதம்பரம் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பட்டதாரி என்றும் தெரிந்து கொண்டேன்.

திரு இல்யாஸ் அவர்களைப் பார்க்க அவர் ஆபீஸுக்குப் போயிருந்தோம். அங்கே, பட்டை தீட்டப் பெறாத பல ரகமான ஆபரணக் கற்கள் குவிந்து கிடந்தன. அவை பளபளக்கவும் இல்லை. வண்ணங்களை வாரி வீசவும் இல்லை. மேக்கப் போடாத ஒரு சினிமா நடிகை போல மிகச் சாதாரணமாகவும் அடக்கமாகவும் இருந்தன.

அவற்றை சைஸ் வாரியாக வெட்டி, எந்திரங்கள் மூலம் பாலிஷ் போட்டுக் கொண்டு வந்து மேஜையில் வைக்கும் போது தான் பளபளப்பாய் டாலடிக்கின்றன.



இல்யாஸ்

அந்த மதிப்பு மிக்க கற்கள் பட்டை தீட்டப்படுமுன் எப்படி அடக்கமாக, சாதாரணமாக இருக்கின்றனவோ அப்படித்தான் திரு இல்யாஸும் அடக்கமாய்த் தோற்றமளித்தார். நம் ஊரில் சில பணக்காரர்கள் தன்னைப் பணக்காரன் என்று சொல்லிக் கொள்ள மாட்டார்கள். தான் ஒரு பணக்காரன் என்று தெரிந்தால் டொனேஷன் கேட்டுத் தொந்தரவு செய்வார்கள் என்ற பயம் தான்! ஆனால் இல்யாஸ், ''எனக்குப் பணம் ஒரு பிரச்னையே இல்லை. கோடிகளில் சம்பாதிக்கிறேன். நிறையச் செலவும் செய்கிறேன்'' என்று ஒளிவு மறைவு இல்லாமல் சொல்லிக் கொள்கிறார்.

தாராளமாகச் செலவு செய்கிறேன் என்று அவர் கூறுவது தமது சொந்தச் செலவை அல்ல. சமுதாயத்துக்குச் செய்யும் உதவிகளையே அப்படிச் சொல்கிறார். நிறையச் செலவு செய்கி

றேன் என்று அவர் சொன்ன விதம் எனக்கு மிகவும் பிடித்திருந் தது. He is a gem of a person என்று ஆங்கிலத்தில் சொல்வார்களே, அப்படிச் சொல்வதற்கு இல்யாஸ் பொருத்தமான மனிதர் என் றால் அது மிகையாகாது.

''படித்துப் பட்டம் பெற்றவர்கள் பொதுவாக ஏதேனும் வேலையில் சேர்ந்து சம்பாதிப்பதைத்தானே விரும்புவார்கள்? தாங்கள் மட்டும் ஏன்...'' என்று இழுத்தேன்.

''ஒரு கிளார்க் அல்லது ஆபீஸராகி, மேலதிகாரிகளுக்குக் கைகட்டி பதில் சொல்லி வாழும் சராசரி மனிதனின் வாழ்க் கையை மேற்கொள்ள விரும்பவில்லை நான்.

பெயர் சொன்னால் பல நாடுகளுக்கும் தெரிய வேண்டும். பணத்தை நமக்கு அடிமையாக வைத்திருக்க வேண்டும். அப்படி ஒரு வியாபாரம் தொடங்கி அதை ஆல்போல் வளரச் செய்ய வேண்டும். இதுவே என் லட்சியம். என் உழைப்பும் விடா முயற்சியும் வீண் போகவில்லை' என்றார் இல்யாஸ்.

''நீங்கள் மாணிக்கக் கல் வியாபாரத்தில் சர்வதேச அளவில் வெற்றிக் கொடி நாட்டியிருக்கிறீர்கள். அப்படியிருக்க, அதி லேயே இன்னும் கிளை விரிக்காமல் ஹோட்டல் நடத்த வேண் டும் என்ற எண்ணம் எப்படி ஏற்பட்டது?''

''நான் பல நாடுகளுக்குப் போய் வந்திருக்கிறேன். எங்கே சென்றாலும், நட்சத்திர ஓட்டல்களில் மற்ற நாட்டவர்களுக்குக் கிடைக்கும் மரியாதையும், உபசரிப்பும் கீழ்த் திசையினருக்குக் கிடைப்பதில்லை. குறிப்பாக இந்தியா, பாகிஸ்தான், பங்களா தேஷ், ஸ்ரீலங்கா ஆகிய நாடுகளைச் சேர்ந்த பயணிகளுக்கு இந்த அனுபவம் நிறையவே ஏற்படுகிறது. காரணம் இவர்கள் மற்ற நாட்டவர்களைப் போல் மிக தாராளமாகச் செலவு செய்ய முடியாதவர்கள் என்பதாயிருக்கலாம்.

சர்வதேச மக்கள் கூடும் இந்த பாங்காக் நகரத்துக்குப் பல நாட்டவர்கள் தினம் தினம் வந்து போகிறார்கள். இந்தியா, பாகிஸ்தான், பங்களாதேஷ், இலங்கை போன்ற நாடுகளிலி ருந்து வரும் நண்பர்களை வி.ஐ.பி.க்களாக வரவேற்று உபசரிக் கும் நோக்கில் ஒரு ஹோட்டலைத் தொடங்க வேண்டும் என்பது என் நீண்டகால ஆசை. அந்த ஆசையின் செயல் வடிவம்தான் இந்த உட்லண்ட்ஸ் இன்'' என்றார் இல்யாஸ்.



ருத்ராபதி ஹமீது யூசுப் கான் ஹிதயதுல்லா பிலால்

எழுபத்திரண்டு அறைகள் கொண்ட அவருடைய 'உட் லண்ட்ஸ் இன்' நம்மைப் போன்றவர்களின் சொர்க்கமாக இருந்து வருகிறது. பாங்காக் ஜெனரல் போஸ்ட் ஆபீஸுக்குப் பக்கத்தில் மிகவும் சுறுசுறுப்பான பகுதியில் அமைந்துள்ள இந்த ஹோட்டல் வரவேற்பறையில் எந்நேரமும் தமிழோசையைக் கேட்க முடிகிறது. ரெஸ்ட்டாரண்டில் சுடச்சுட இட்லி, தோசை கிடைக்கிறது.

யூசுப், ஹமீத், கான், பிலால், இதயதுல்லா, உத்ராபதி ஆகிய இளைஞர் பட்டாளம் ஒன்று இந்த ஓட்டலைச் சீரும் சிறப்புமாக நிர்வகித்து வருகிறது.

உள்ளே நுழையும் போதே ஏதோ ரொம்ப காலமாய்த் தெரிதந்தவர்கள் மாதிரி அன்பு காட்டி உபசரிக்கிறார்கள். இதை நான் இல்யாஸிடம் சொன்னபோது, ''உண்மையில் இந்த விஷயத்தில் நான் கொடுத்து வைத்தவன்தான்' என்று மகிழ்ந்து போனார்.

திரு இல்யாஸ் தமது சொந்த ஊரான சிதம்பரத்தையும் மறந்துவிடவில்லை. சிதம்பரத்தில் நடராஜர் கோவிலுக்கருகே ஒரு கல்யாண மண்டபம் கட்டியிருக்கிறார்.அந்த மண்டபத்தை

இந்துக்களின் உபயோகத்துக்காக மட்டுமே ஒதுக்கியிருக்கிறார்.

ஏற்கனவே தாய்லாந்து முஸ்லிம் சங்கத்தின் துணைத் தலைவராகப் பணியாற்றி வரும் இவர் இப்போது பாங்காக் தமிழ்ப் பண்பாட்டுக் கழகத்தின் தலைவராகவும் ஆகியிருக்கிறார்.

பாங்காக் நகரில் அங்குமிங்குமாகச் சிதறிக் கிடக்கும் முன்னூறு தமிழக் குடும்பங்களை ஒன்று சேர்த்து அவர்களுக்கிடையே ஒரு நேச உணர்வை உண்டாக்குவதே இந்தக் கழகத்தின் நோக்கமாம். நண்பர் ஹுமாயூன் செயலாளராகவும், நண்பர் சலாவுதீன் பொருளாளராகவும் இந்தக் கழகத்தின் நிர்வாகப் பொறுப்பினை ஏற்றிருக்கிறார்கள். பொங்கல், ரம்சான், ஈத், தீபாவளி, கிறிஸ்துமஸ் ஆகிய எல்லாப் பண்டிகைகளையும் கொண்டாடத் திட்டமிட்டிருப்பதுடன் இல்யாஸை ஆசிரியராகக் கொண்டு 'தமிழ் மலர்' எனும் மாத இதழ் ஒன்றும் நடத்த முனைந்திருக்கிறார்கள்.

"இல்யாஸ் என்ற பெயருக்கு என்ன அர்த்தம்?" என்று அவரிடமே கேட்டேன்.

"'இறைவனின் தூதன்' என்று சொல்வார்கள்" என்றார்.

வெளிநாடுகளில் சிலர் வாழ்ந்து வரும் முறையில், செய்கின்ற பணியில், அடைந்துள்ள புகழில், செல்வாக்கில் - அவர்களை 'அன் அஃபிஷியல் அம்பாஸடர்ஸ்' என்று குறிப்பிடுவதுண்டு. இறைவனின் தூதர் என்று பெயர் கொண்ட இல்யாஸ் தாய்லாந்தின் அதிகார பூர்வமற்ற இந்தியத் தூதராகவே செயல்படுவதாக எனக்குப்படுகிறது.





நாங்கள் ஓட்டலில் தங்கியிருந்த நாட்களில் நண்பர் ஹுமாயூன், எங்களை வேறு எங்கும் சாப்பிட விடவில்லை.

காலை ஆறுமணிக்கெல்லாம் அவர் வீட்டிலிருந்து பெட் காபி வந்து எங்கள் அறைக் கதவைத் தட்டும். பிறகு குளித்து முடிவதற்குள் இட்லி தோசை! அதை அடுத்து போன் கால், ஹுமாயூன்தான் பேசுவார்.

''இன்றைக்கு எங்கே போகப் போகிறீர்கள்?''

நாங்கள் எங்கே போகிறோம் என்பதைத் தெரிந்து கொண்டு அதற்கேற்றபடி உணவு தயார் செய்து அழகான அட்டைப் பெட்டிகளில் 'பாக்' செய்து அனுப்பி விடுவார்.

ஹுமாயூன் மயிலாடுதுறையில் மெட்ரிகுலேஷன் பள்ளி ஒன்றை நடத்தி வருகிறார். அந்தப் பள்ளியின் தலைமை ஆசிரியர் மகன் சுந்தரை (பிராம்மண இளைஞர்) பாங்காக்குக்கு அழைத்துப் போய் தம்முடைய 'பெனின்ஸுலா கலர் ஸ்டோன் கம்பெனி'யில் வேலையில் அமர்த்தியிருக்கிறார்.

நீடூர் நஸிம் சகோதரர்களில் ஒருவரான ஹுமாயூனிடம் எனக்குப் பிடித்த அம்சம் அவரது ஒழுக்கம். வசதியாக இருக்கிறோம் என்பதற்காக ஊதாரித்தனத்துக்கோ துர்ப் பழக்கங்களுக்கோ அவர் தம்மை அடிமையாக்கிக் கொள்ளவில்லை. சகோதரர்கள் நால்வருமே தனித்தனியாக ஜெம் வியாபாரம் செய்து வந்த போதிலும் மிக ஒற்றுமையோடு வாழ்கிறார்கள். நாலுவிதமான கற்கள் ஓர் ஆபரணத்தில் சேர்ந்து ஜொலிப்பதைப் போல விசேஷ நாட்களில் எல்லோரும் ஒன்றாய்க் கூடி மகிழ்கிறார்கள்.

ஒருநாள் பாங்காக்கில் குரான் ஓதும் போட்டி நடந்தது. அப்போட்டியைக் காண இரவு ஒன்பது மணிக்கு மேல் எல்லோ ரும் கிளம்பினார்கள்.

புறப்படும்போது 'நானும்' என்றார் சுந்தர். ''சரி, புறப்படு!'' என்றார் ஹுமாயூன். லுங்கியும் குல்லாயும் அணிந்து கொண்ட சுந்தர் நெற்றியில் விபூதியும் பூசிக் கொண்டு உற்சாகத் தோடு புறப்பட்டு விட்டார்!

அவரை அந்தக் கோலத்தில் பார்த்தபோது நாங்கள் சிரித்து விட்டோம். மத நல்லிணக்கத்தின் ஒரு சின்னமாகக் காணப் பட்ட சுந்தரை அப்போது நம் ஊர் பாரதீய ஜனதா கட்சி பார்க்கா மல் போனார்களே என்று வருத்தமாயிருந்தது!

தாய்லாந்துக்குப் போய் வந்து ஸயாம் அரிசி பற்றிச் சொல்லாவிட்டால் திருமணப் பத்திரிகையில் மணமக்கள் பெயர் விட்டுப் போன மாதிரி ஆகிவிடும்! தாய்லாந்தின் பூர்வி கப் பெயர்தான் ஸயாம். அந்தப் பெயர் இப்போது அரிசியில் மட்டுமே ஒட்டிக் கொண்டுள்ளது. ஸயாம் அரிசி உலகப் பிரசித் தமானது. அதன் வெண்மையோ திண்மையோ, ருசியோ வேறு எந்த நாட்டு அரிசிக்கும் வராது. பாசுமதியெல்லாம் அதற்கப்பு றம்தான்! அடுத்த ஜென்மம் என்று ஒன்று உண்டென்றால் நான் தாய்லாந்தில் பிறக்கவே விரும்புகிறேன். இத்தனை ருசியான அரிசியும், இளநீரும், ஆரஞ்சு ஜூஸும் அமைதியான ஆட்சியும் உள்ள நாட்டை விட்டு விட்டு வேறு எந்த நாட்டில் பிறக்கத் தோன்றும்!

சாலையில் போகும்போது அந்த நாட்டின் விளை நிலங் களை வழி நெடுகப் பார்த்துக் கொண்டே போனேன். தலையில் தொப்பி அணிந்த உழவர்கள் எந்த நேரமும் நடவு நட்டுக் கொண் டிருந்தார்கள். சிற்சில இடங்களில் பெருமளவில் கரும்பு சாகுபடி நடந்து கொண்டிருந்தது.

தாய்லாந்துக்காரர்களுக்கு அரிசி வெறும் உணவு மட்டு மல்ல. அதை ஒரு தெய்வமாகவே வழிபடுகிறார்கள்.

நெல்லையோ அரிசியையோ கீழே சிந்தினால் அவர்க ளுக்கு மிகுந்த கோபம் வந்துவிடுமாம். ஒரு குழந்தை கொஞ்சம் அதிகமாகச் சாப்பிட்டு விட்டு வயிற்றுவலி என்று சொல்லி அழக்கூடாதாம். அப்படி அழுதால் அது அரிசியைப் பழிப்பதா குமாம்.

முடியவில்லை. முப்பது ஆண்டுகளுக்கு முன்பே இதற்குத் தடை விதிக்கப்பட்டதாம். ஆனாலும் தாய்லாந்து அரசின் நடவடிக்கை இதுவரை பலன் தரவில்லை என்றுதான் சொன்னார்கள்.

தாய்லாந்து, பர்மா, லாவோஸ் ஆகிய மூன்று நாடுகள் சேருமிடத்தைத் 'தங்க முக்கோணம்' (கோல்டன் ட்ரையாங்கிள்) என்று வர்ணிக்கிறார்கள். இந்த முக்கோணப் பகுதிதான் ஓபியெம் வியாபாரத்தின் கேந்திரமாக உள்ளது.

ஓபியெம் செடிகளைப் பயிரிட்டு வெளிநாடுகளுக்குக் கடத்திச் செல்லும் இந்தக் கேந்திரம் அடர்ந்த காட்டுப் பகுதியில் அமைந்துள்ளதால் ஹெலிகாப்டரில் பறந்து போய் இந்தச் செடிகள் பயிரிடப்பட்டிருக்கிறதா என்று பார்ப்பார்கள். ஓபியம் செடிகளைப் போலவே பூ பூக்கும் வேறு வகைச் செடிகளையும் பக்கத்தில் பக்கத்தில் நெருக்கமாகப் பயிரிட்டு அசல் தெரியாதபடி ஏமாற்றி விடுகிறார்கள்.

''இவர்களைக் கண்டு பிடித்து தண்டிக்கவே முடியாதா?'' என்று கேட்டேன்.

''இந்தக் காடுகள் நிறைந்த மலைப் பகுதியில் ஈ காக்கை நுழைய முடியாது'' என்றார் சொம்பட்.

''நம் ஊரில் சந்தனக் கடத்தல் வீரப்பனைப் பிடிக்க முடிகிறதா, அந்த மாதிரிதான்'' என்றார் ஸ்ரீவே.

தாய்லாந்தின் தேசியச் செல்வமாகக் கருதப்படுவது தேக்கு மரங்கள்.

''இந்த ராட்சத மரங்களை ரயிலும் லாரியும் இல்லாத காலத்தில் எப்படி ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்துக்குக் கொண்டு போனார்கள்?'' என்று கேட்டேன்.

''தேக்கைப் படைத்த இறைவன் மிகுந்த முன்யோசனையுடன் தாய்லாந்து முழுவதும் நதிகளையும் யானைகளையும் ஏராளமாகப் படைத்திருக்கிறார். ஆகவே கவலை இல்லை'' என்றார் சொம்பட்.

ஆங்காங்கே காடுகளில் வெட்டி வீழ்த்தப்படும் தேக்கு மரங்களை நூற்றுக்கணக்கான யானைகள் தங்கள் துதிக்கையால் தள்ளிக் கொண்டு போய் நதிக்கரைகளில் உள்ள படகுகளில்



''அரிசி மீது இவ்வளவு அக்கறை காட்டும் அந்த மக்கள் அதே அக்கறையை உயிரைக் குடிக்கும் 'ஓபியெம்' செடிகளை வளர்ப்பதிலும் காட்டுகிறார்களே, அதுதான் விந்தையாக இருக் கிறது!'' என்றேன்.

''பெரும்பாலும் இந்த போதை மருந்துச் செடிகள் பயிரிடப் படுவது வடக்கு தாய்லாந்தில்தான். அந்த மலைக்காட்டுப் பகுதியில் வாழும் பழங்குடி மக்கள் மொத்தம் மூன்று லட்சம் பேர் என்றால் அவர்களில் இரண்டு லட்சம் பேரின் வயிற்றுப் பிழைப்பே இந்த ஓபியம் செடிகள் பயிரிடுவதுதான்'' என்றார் சொம்பட்.

''அரசு இதை ஏன் தடை செய்யாமல் விட்டு வைத்திருக்கி றது?'' என்ற என் கேள்விக்குச் சரியான பதில் யாராலும் சொல்ல

ஏற்றிக்கொண்டிருந்த காட்சி பிரம்மாண்டமான சினிமா ஸ்கோப் படம் பார்க்கிற மாதிரிஇருந்தது.

கோடி கோடியாக அந்நியச் செலாவணியை ஈட்டித் தருவது இந்தத் தேக்குச் செல்வம் என்றால் அந்தப் பெருமையில் பெரும் பங்கு இந்த தும்பிக்கைக் காரர்களுக்குத்தான் சேரவேண்டும்!

''ஐயா, உங்கள் விமானம் நாலரை மணிக்கு. ஆகவே, நீங்கள் இப்போதே புறப்பட வேண்டியதுதான்'' என்றார் ஹுமாயூன்.

''இப்போது மணி பன்னிரண்டுதானே ஆகிறது?''

''இங்கிருந்து விமான கூடம் போய்ச் சேரக் குறைந்தது இரண்டு மணி நேரமாவது தேவைப்படும். போக்கு வரத்து நெரிசலையும் ஸிக்னல் தடைகளையும் கடந்து செல்ல வேண்டும் அல்லவா!'' என்றார்.

தாய்லாந்து சுற்றுப் பயணம் முற்றுப் பெற்று ஊருக்குத் திரும்பும் நேரம் நெருங்கியதும், அந்தச் சிரித்த முக மக்கள், ஹுமாயூன் வீட்டுச் சாப்பாடு, இல்யாஸின் விருந்தோம்பல், 'தாய்' கலாசாரம், கலைச்செல்வம், க்வாய் நதி பாலம், பெரிய பெரிய புத்த ஆலயங்கள், கூட்டம் கூட்டமாய் பிட்சுக்கள், இனிக்கும் இளநீர், ஆரஞ்சு ஜுஸ், நடிகைபோல் தோற்றமளித்த அந்தப் பழக்கடை அழகி என்று ஏராளமான காட்சிகள் என் கண் முன் ஓடி மறைந்தன. நண்பர் ஹுமாயூனிடமும் இல்யாஸிடமும் விடைபெற்றுக் கொண்டு புறப்பட்டபோது உணர்ச்சி வசமாகிக் கண்களில் நீர்த்திரையிட்டது.

முடிவுரை: இத்தனை வாரம் எழுதியது போக தாய்லாந்தைப் பற்றி எழுத வேறு ஒன்றுமே இல்லை என்று சொல்லிவிட முடியாது. கடலோரம் நின்று சற்றே கால் நனைத்திருக்கிறேன். அவ்வளவுதான்.





**த**மிழர்களுக்கு நன்கு பரிச்சயமான பெயர் சாவி. பேராசிரியர் 'கல்கி' அவர்களின் நிழலில் தம்மைச் செம்மைப்படுத்திக் கொண்டவர். 'கல்கி' அவர்கள் சொந்தமாக வார இதழ் தொடங்கியபோது, 1943 முதல் 1947 வரை அவருடன் பணியாற்றினார்.

1967ல் தினமணி கதிர் இதழின் ஆசிரியராகப் பொறுப்பேற்றார். பத்து ஆண்டுகளுக்குப் பிறகு கலைஞர் கருணாநிதியின் குங்குமம் வார இதழ் ஆசிரியராகி அந்த இதழை மிகச் சிறந்த முறையில் வளர்த்தார். தலைவர் காமராஜர் பாசத்தோடு நெருங்கிப் பழகிய மிகச் சில பத்திரிகையாளர்களில் இவரும் ஒருவர். கர்நாடக இசை, நாட்டியம் போன்ற நுண்கலைகளின் தீவிர ரசிகர்.

இவர் எழுதிய நூல்கள்:

வாஷிங்டனில் திருமணம், நவகாளி யாத்திரை, விசிறி வாழை, வழிப்போக்கன், கேரக்டர், பழைய கணக்கு, இங்கே போயிருக்கிறீர்களா, சிவகாமியின் செல்வன், கோமகனின் காதல், தெப்போ 70, திருக்குறள் கதைகள், வடம் பிடிக்க வாங்க ஜப்பானுக்கு, ஆப்பிள் பசி, ஊரார், கனவுப்பாலம், வேதவித்து.